ஸ்ரீ

# ஸ்ரீ ஜிநாநந்தம்

ஆக்கியோன்

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்



ஸ்ரீ மஹாவீர நிர்வாண சகாப்தம் 2455

பிரபவ௵ பங்குனிமீ

1928

ஸ்ரீ

# ஸ்ரீ ஜிஞண ந்தம்



திருப்பறம்பூர், ஸ்ரீ தருமசாகர சுவாமிகள்

சாஸ்திர சாலையின் பொருளுதவியால்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீ மஹாவீர நிர்வாண சகாப்தம் 2455

பிரபவஹு பங்குனிமீ

1928



[விலை அணா 8.

## இப்புத்தகத்தி லடங்கியவை.

---

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்.



இன்னுத செய்யாமை யென்னும் ஒழுக்கத்தில்,
மன்னுயிர்க் கெல்லாம் மறை.

—அறநூல்.

# INTRODUCTION.

I FEEL great pleasure in writing a short introduction to this valuable book. The author Swami Suddhananda Bharati needs no introduction to the Tamil World. His name is already familiar to the public as the Editor of " Balabharati ", of " Samarasabodhini, " and of " The Tamil Swarajya " and as the author of a number of books both in prose and verse on different subjects. His books on Physics, Chemistry, Physiology, Astronomy, etc., will be immensely useful to those who know only Tamil. The Aranool or Work on Dharma written in Kurral metre is an excellent guide-book on morals and practical rules of life suitable to modern conditions. His big epic called Bharatasakhti which is still in the manuscript form is a substantial contribution to the Tamil Literature.

His is a life of sacrifice for the cause of human peace and welfare. He believes that the political, religious and social uplift of mankind can be achieved only by adopting the triple-path of Purity, Independence and Equality. He has got a good command of the English, Sanskrit and Tamil languages and in him we find a happy blending of the Eastern and Western culture. Being a *sadhu* he spends his time in service, study, writing

books, meditation and fasting. He has made a study of the different religions and has sung the lives of their propounders.

His writings are so full of literary merits and beauty that they remind us of the classical productions of the ancient writers. Whatever he thinks worthy of being preserved, studied and followed he puts down in his sweet and beautiful poetic lines so that the Tamilians may read them with pleasure. His style is throughout elegant, simple, and easy flowing.

In this book, which was composed within the brief period of ten days of complete silence and fasting, the learned Swamiji tells us the life-story of the Blessed Lord Mahavira who lived from 599 B.C. to 527 B.C. He was born as the son of a king who was related to several of the then ruling Chiefs in Northern India. His maternal grandfather was the famous King Chetaka who was the President of the Vrijjian Confederacy. Long before the birth of the Lord the angels prepare the way for His Advent. After His birth they come to the earth often and minister unto Him. Even from His birth the Lord has three kinds of knowledge, *mati*, *sruti*, and *avadhi*. His body is of an unique character and beauty. As He advances in age and as He sees the misery around Him. He makes up His mind to renounce all attachment to the world and do penance. His parents entreat Him to live in the palace and enjoy royal pleasures. But He explains to them the nature of the worldly pleasures and with their

permission becomes a saint in His thirtieth year. He distributes His wealth among the poor and goes into the forest naked. He gets the fourth kind of knowledge—*manaparyaya*. He spends twelve years in severe penance, fasting, and meditation to acquire omniscient knowledge. At the age of forty-two He gets infinite knowledge, infinite perception, infinite power and infinite bliss. Out of great compassion for the world He preaches the Way of Salvation which consists of Right Faith, Right Knowledge and Right Conduct. According to Him every soul (jiva) is potentially God. We experience pleasure or pain as the result of our own good or bad Karmas. When we get ourselves free from Karmas the God in us will shine forth in all His Glory. This manifestation or Realisation of God can be gained only through penance, meditation, and righteous life. "*Regard every living being as thyself and harm no one*"—is the first great teaching of the Lord. There can be no virtue which cannot find place in that sublime and all-comprehensive Message of the Tirthamkara.

Wherever the Lord went there was peace and plenty; even animals naturally enemical to one another moved in friendliness in His presence; and miracles were experienced all around. People saw in Him God moving on earth. He taught what He knew through His infinite Wisdom. His teachings were not only for mankind but for all living beings who understood the Voice of the Lord. He preached His great Message of Ahimsa and

Universal Love for thirty years and attained Nirvana in Pavapuri.

This book richly supplies a want since there was no account of the life of the Lord-written in Tamil till now. It is hoped that all Tamilians, Jains as well as Non-Jains, will find this book very useful and interesting.

Sri Mahavira Jayanti,
Chaitra Sukla Triyodasi,
*2nd April 1928.*

C. S. MALLINATH.

ஸ்வஸ்தி ஸ்ரீ தரும சாகர சுவாமிகள்.



இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

—திருக்குறள்.

# நான்முகம்.

---

மூதிளந் தமிழின் முளரி யடியில்
போதலர் நெஞ்சப் புதுமலர் வைக்குதும்.

அன்புத்தகழியில், ஆர்வநெய்யூற்றி, இன்பத்திரியி ணைத்து, அறிவுச் சுடரேற்றி, சுத்த சக்தியை வழிபடுதும். உயிர்கள் கடவுட்டன்மை யடைவதற்கு மூன்று வழிகள் படிப்படியாக உள்ளன. 1. மனோவாக்குக்காய சுத்தம், 2. ஞானத்தால் பந்தவிடுதலை யடைந்த சுதந்திரம், 3. அனைத்திலும் ஆண்டவனைக் கண்டு தானும் அதன் மயமாகவே கலக்கும் சமத்துவம். இதுவே யான் தெளிந் துரைக்கும் மும்மணிவழி. இவ்வழியே சுத்தானந்த வழி. அவ்வழியிற் பூரணம்பெற்ற சித்தனை எப்போதும் எனது மனக்கோயிலில் வைத்து வணங்கி வந்தேன். எனது பாமலரில் ஜினனந்தத் தேனைப்பாய்ச்ச நெடுநாளாக விரும்பி முயன்றேன். எல்லாச் சமய நூற்களையும் ஆராய்ந் ததுபோன்று ஜைன நூற்களையும் ஆராய்ந்தேன். எனி னும் சென்னையிலேயே ஜைன நூற்கடலில் இன்ப நீராடி னேன். எனது உத்தம நண்பரும், "ஜைன கெஸட்" பத்திராதிபருமாகிய ஸ்ரீ C. S. மல்லிநாத நயினார் அள வற்ற உதவி புரிந்தார். பகவான் ஸ்ரீ மஹாவீர வர்த்தமான தீர்த்தங்கரருடைய திருக்கதையை யார் செந்தமிழ்க் கவியி லமைப்பார் என்று அவரும் எதிர்பார்த்து எளியேனிடம் வேண்டினர். என் உள்ளப்பசிக்கு அவ்வேண்டுகோள்

உணவளித்தது. அவர் தமதிடமிருந்த மஹா புராணம் ஸ்ரீ புராணம், தத்வார்த்த ஸூத்ரம், பஞ்சாஸ்திகாயம், புருஷார்த்த சித்தியோபாயம், மேரு மந்தர புராணம், சீவகசிந்தாமணி, இன்னும் ஆரியம், தமிழ், ஆங்கிலம், ஹிந்தி பாஷைகளிலுள்ள புத்தகங்களை எனக்குக் கொடுத்து அவைகளை ஆராய்ச்சி செய்யும் பொழுது உடன் இருந்து உதவி செய்தார். ஜைன நூற்களை நன்கு ஆராய்வதற்கு அவருடைய சிநேகமும், சிறந்த இடமும், பொழுதும் சென்னையிற் கிடைத்ததே வெற்றிக் குறிகுறியாயிருந்தது. ஜைன சாஸ்திர ஆராய்ச்சி விஷயத்தில் அவர் எனக்கு செய்த உதவி என்றும் மறக்கற் பாலதன்று. இராயப்பேட்டை ஸ்ரீ பார்சுவநாத நயினாரும், ஆரணி ஸ்ரீ வசுபால நயினாரும் எனக்குப் சில விஷயங்களை விளக்கினார்கள்.

ஓரிரவில் திடீரென்று சித்தனின் ஒளியுருவம் எனது தியானத்தில் தோன்றி என்னை அது மயமாக்கியது. எனதுள்ளத்தில் இன்பக் கவியூற்றெடுத்தது. அன்று முதல் (4-1-28, புதன்கிழமை) பட்டினியும் மௌன விரதமும் தொடங்கினேன். ஜினானந்தப் பெருக்கை மூன்று நாள் தியானத்தால் நிறைத்துக் கொண்டேன். 6-1-28 இரவு 12-மணிக்கு ஜினானந்தம் முதற்காவியம் எழுதத் தொடங்கி 13-1-28 இரவு 12-மணிக்கு காவியம் முற்றும் முடிந்தது. ஜினானந்தத் தேனைப் பருகுந்தோறும் பேரின்பம் பிறந்தது.

எச்சமயத்தாரும் இதை இன்புறக் கற்றுத் தமிழ் நுகரலாம். சுத்த சுதந்திரச் சமத்துவச் சுடரொளியான சித்தன் மனித வுலகிற்கெல்லாம் ஒரு பூரண உதாரணம் ஆகும். சாந்தப் பசிதவிக்கும் தற்போதுலகிற்கு ஜின

னந்தம் அமுத சஞ்சீவியாகும். பாரத நாட்டின் பெருமையும், நகரப் பெருமையும், அரச நீதியும், திரிசலையின் பெண்மைச் சிறப்பும், மனையறமும், மக்களறமும், வர்த்தமான ஜினன், சன்மதி, வீரன், மகா வீரன், அதி மகா வீரனென பெருமையும், பகவானின் வீரத்துறவும், தூய பிரம்மசரியமும், துறவின் பான்மையும், தவநிலையும், முனி யொழுக்கமும், முனிகள் பால் இல்லறத்தார் கடமையும், சந்தனையின் கற்புப் பெருமையும், வீரனின் கேவல ஞானச் சிறப்பும், சமவசரண மாண்பும், எல்லாச் சமயங்களுக்கும் பொருந்தும் மும்மணி வழியின் உபதேசப் பெருமையும், பரிநிர்வாணமாகிய சித்த பதவிபெற்ற சிறப்பும், ஜினனந்தத்தில் இனிக்க இனிக்க நுகரலாம். உலகிற் பூரணமான சுத்த நிலைக்கு வழிகாட்டும் ஜினனந்தத்தை தமிழகம் உளங்கனிந்து போற்றுமாக. ஜினனந்தம் என்றால் ஆத்ம வெற்றிக் களிப்பு என்பதே பொருள். சுற்றுமுள்ள கரும அழுக்குகளின்றி சுத்தப்பட்டு, சுதந்திர மடைந்தால்தான் ஆத்மாவே தானாகும் சமரஸானந்தமான ஆத்மவெற்றி பெறலாம். மஹாவீரர் சுத்தமுற்று அப்படி ஒப்பற்ற ஆனந்தத்தை அடைந்தாரென்பதை ஜினனந்தம் விரித்துரைக்கும்.

இக்காவியத்தை அச்சிடுவதற்கு மீண்டும் பெரும் பாடுபட்ட எனது நண்பர் ஜினதாஸரான ஸ்ரீமான் மல்லி நாத நயினருக்கு நன்றி செலுத்துகிறேன். இதற்குப் பொருளுதவி கிடைத்ததும் ஒரு அற்புதமே. ஸ்வஸ்தி ஸ்ரீ தருமசாகர சுவாமிகள் என்னும் உத்தமத் துறவி வட தேச யாத்திரையினின்றும் திரும்புகையில் தமதிடமிருந்த சிறிது பொருளை திருப்பறம்பூர் தரும சாகரஸ்வாமிகள் சாஸ்திர சாலைக்குப் பயன் படுத்துக என்று சொல்லி

அதை சென்னை அன்பர் ஸ்ரீ. தி. ஆதிநயினாரிடம் கொடுத்துச் சென்றார். இந்நூல் அச்சிலிருக்கும்பொழுது இதன் சுவையை எப்படியோ அறிந்து அன்பர் ஸ்ரீ. தி. ஆதிநயினார், சுவாமிகளின் பொருளை இதன் அச்சுச் செலவிற்கே ஈய மனங்கனிந்தார். சுவாமிகளுக்கும் அவருக்கும் எனது அன்புள்ள நன்றி என்றும் உரியது. ஸ்ரீ தருமசாகர சுவாமிகள் சாஸ்திர சாலை மென்மேலும் விருத்தியடைவதாக.

தமிழகம் இக்காவியச் சுவையை நுகர்ந்து பயன் பெறுக.

> சுத்தஞ் சுதந்திரமுந் தோற்றுஞ் சமத்துவமே
> இத்தலத் தோர்க் கின்ப நெறி.

சென்னை,
2—4—1928

ஜ்ஞானந்தன்,
சுத்தானந்த பாரதி.

# பகவான் ஸ்ரீ மஹா வீரர்



நற்காட்சி, நல்லறிவு, நல்லொழுக்க, மும்மணியே
எக்காலும் வீட்டுநெறி யே.

ஓம்

சுத்தசக்தி துணை.

# ஸ்ரீ ஜிநேந்தம்.

## க. பாயிரம்.

### வணக்கம்.

1. அத்தன் ஆதி யரியணைச் செல்வனும்
வர்த்த மானன் வரன்புனி தன், சினன்
சித்தர் சிங்கஞ் சிறப்பினைச் செப்பிடச்
சுத்த சக்தி துணையென துள்ளரோ! (க)

### வேறு.

2. எல்லா முணர்வான் இறைவன் னருள் சிந்தியென்றும்
உள்ளான், இனியான் உலகின்னொளி யாகி நிற்கும்
வல்லான் அருகன் மருவற்றிடு காட்சியானைச்
சொல்லால் நினைப்பாற் றெழிலாற்றொழுதேத்து
வோமே. (உ)

### வேறு.

3. பற்ற றுந்தவன் பதினற[1]ஞ் செறிதவப் பரிசோன்,
முற்று மன்புரு வானவன் முக்குடை[2] முதல்வன்,

---

1 பதினறம்—தசதர்மம். அவையாவன:—1. உத்தமக்ஷமை (பொறுமை) 2. உத்தம மார்தவம் (பணிவு), 3. உத்தம ஆர்ஜவம் (நேர்மை), 4. உத்தம சௌசம் (சுத்தம்), 5. உத்தம சத்யம் (உண்மை), 6. உத்தம சம்யமம் (அடக்கம்), 7. உத்தம தபம், 8. உத்தம தியாகம், 9. உத்தம ஆகிஞ்சன்யம் (பற்றின்மை), 10. உத்தம பிரம்ம சர்யம்.

2 முக்குடை:—சந்திராதித்யம், நித்ய விநோதம், சகல பாசனம் என்பன.

குற்ற மற்றவன், குணநிறை மணமகிழ்ச் சுடரோன்,
எட்டு நீர்மையன் [3] இணையடி யணைந்ததென்
மனமே. (௩)

வேறு.

4. அருகரே வணக்கம்! சித்தரே வணக்கம்!
ஆசிரி யப்பெரு மாரே!
திருமிகு முபாத்தி யாயரே வணக்கம்!
செய்யசா துக்களே வணக்கம்!
மருவுமோங் காரத் தைம்பர மேட்டி [4] ச்
சித்தர்காள் நித்தமும் வணக்கம்!
உருகியென் னெஞ்சத் தேனையும் அடியில்
ஊற்றினேன் உமதடியோனே. (௪)

---

[3] எட்டு நீர்மையன்—எண்குணத்தான். எண்குணங்களாவன:—கடையிலாவறிவு, கடையிலாக்காட்சி, கடையிலா வீரியம், கடையிலா வின்பம், நாமமின்மை, கோத்திரமின்மை, ஆயுவின்மை, அழியா வியல்பு.

[4] ஐம்பரமேட்டி—பஞ்ச பரமேஷ்டிகள். அருகர், சித்தர் (அசரீரி), ஆசார்யர், உபாத்தியாயர், சாதுக்கள் (முனிவர்). இவர்களுடைய பெயர்களின் முதல் எழுத்துக்கள் சேர்ந்தே ஓம் என்றாயிற்றென்பது ஜைனர்களின் கொள்கை.

அறிவரிய குணத்தருக னசரீரி யாசிரிய னுவாத்தி கோதஞ், செறிவரிய முனிவரெனுந் திருநாம முதலெழுத்தோ ரைந்துஞ் சேர்ந்து, பிரிவரிய வோங்கார முன்னுரைப்பர் பின்னு மதன் பெருமை யோரார், பொறி வழியில் வருநாதர் பொருளில் வரும் பெயர் புனையும் புவனத்தாரே (திருக்கலம்பகம், சக).

அரஹந்தா அசரீரா ஆயிரியா தஹ உவஜ்ஜயா முணிணோ படமக்கரணிப்பண்ணோ ஒங்காரோ பஞ்ச பரமேட்டி.

அ + அ = ஆ; ஆ + ஆ = ஆ; ஆ + உ = ஓ; ஓ + ம் = ஓம்.

வேறு.

5. அறுபொருளும்[5], ஆறுயிரும்[6] நவபதமும்[7]
முக்காலும்[8], ஐந்து காயம்[9],
அறிவு[10] கதி[11] நடை[12] விரத[13] சமிதியைந்[14]
தைந்தோடும் அமைந்த வுண்மை
நெறிகாட்டி யருளாளும் நித்தியர்கள்
அறுநால்வர்[15] நிமல சித்தர்,

---

5 அறுபொருள்—ஷட்திரவ்யங்கள். அவை ஜீவன், புத்கலம், தர்மம், அதர்மம், ஆகாசம், காலம் என்பனவாம்.

6 ஆறுயிர் ;—பிருத்வி, அப்பு, தேயு, வாயு, வனஸ்பதி, த்ரஸ ஜீவன்கள்.

7 நவபதம்—ஒன்பது பதார்த்தங்கள். ஜீவன், அஜீவன், ஆஸ்ரவம், பந்தம், சம்வரை, நிர்ஜ்ஜரை, மோக்ஷம், புண்ணியம், பாபம்.

8 முக்காலம்—இறந்தகாலம், நிகழ்காலம், வருங்காலம்.

9 ஐந்து காயம்—பஞ்சாஸ்தி காயங்கள். ஜீவாஸ்தி காயம், புத்கலாஸ்தி காயம், தர்மாஸ்தி காயம், அதர்மாஸ்தி காயம், ஆகாசாஸ்தி காயம்.

10 அறிவு—ஞானம். மதி ஞானம், ஸ்ருதி ஞானம், அவதி ஞானம், மனப்பர்யயஞானம், கேவலக்ஞானம் என ஐந்து விதம்.

11 நரககதி, திர்யக்கதி, மனுஷ்யகதி, தேவகதி, மோக்ஷகதி.

12 நடை—சாரித்ரம். சாமாயிகம், சேதோபஸ்தாபனம், பரிஹாரவிசுத்தி, சூக்ஷ்ம சாம்பராயம், யதாக்யாதம்.

13 விரதம் ஐந்து. அஹிம்ஸை, சத்யம், அஸ்தேயம், பிரம்மசர்யம், அபரிக்ரஹம்.

14 சமிதி ஐந்து. ஈர்யாசமிதி, பாஷாசமிதி, ஏஷணாசமிதி, ஆதான நிக்ஷேபணாசமிதி, உத்சர்கசமிதி

15 அறு நால்வர்—24 தீர்த்தங்கரர்கள். 1. ஸ்ரீ விருஷபநாதர். 2. அஜிதநாதர் 3. சம்பவநாதர் 4. அபிநந்தனர், 5. சுமதிநாதர், 6. பத்மப்பிரபர், 7. சுபார்சுவநாதர், 8. சந்திரநாதர், 9. புஷ்பதந்தர், 10. சீதளநாதர், 11. சிரேயாம்சர், 12. வாசுபூஜ்யர், 13. விமலநாதர், 14. அனந்தநாதர், 15. தர்மநாதர், 16. சாந்தி நாதர், 17. குந்துநாதர், 18. அரநாதர், 19. மல்லிநாதர், 20. முனிசுவிரதர். 21. நமிநாதர், 22. நேமிநாதர், 23. பார்சுவநாதர், 24. மகாவீர வர்த்தமானர்.

பொறியவித்த புனிதரு மும் பூரணர்கள்
பொற்பதங்கள் புந்தி வைப்பாம். (ரு)

வேறு.

குரு வணக்கம்.

6. யாதொடங்கினு மார்க்கினுங் கேட்கினின்
நாத வோர்மொழி நாமம தேவருந்
தீதறுத் தொளியின் வழி சேர்த்ததோர்
சோதி மௌனக் குருவென்றன் சுத்தனே! (சா)

7. மூன்று நாடி யுணர்ந்த முனிவர்கள்
சான்ற மாதவரின் றவமெய்ச்சுடர்
ஊன்றி யென்னுள் ளொளிசெய அவ்வொளி
ஈன்ற பண்ணி லிணைப்ப னருகனே! (எ)

8. வாஸு பூஜ்யனை [16] மல்லியை நேமியைப்
பாச நாதனை வீரனைப் பண்புடன்
மாசி லாத மனத்துட னேத்துவோர்
ஆசி லாத வருட்சுட ராவரே! (அ)

வேறு.

9. அறிவிற்கும், இயற்கைக்கும், அமைந்த பெரும்
அமைதி தரும் அமரவாழ்வை,
உறவிற்கும், உணர்விற்கும், உயர் விற்கும்,
ஒற்றுமையின் வித்தாய் ஈந்தே,

---

16 வாசு பூஜ்யர், மல்லிநாதர், நேமிநாதர், பார்சுவநாதர், மஹாவீரர் ஆகிய இவ்வைந்து தீர்த்தங்கரர்களும் குமார காலத்திலேயே விவாக மின்றி துறவு பூண்டு தவம் செய்து முக்தி நெறியைக் காட்டியவர்கள் ஆகையால், அவர்களை ஈண்டு ஆசிரியர் தனியாகத் துதிக்கின்றார்.

துறவிற்கும், இல்லறத்தின் வாழ்விற்கும்,
தூயதொரு தொடர்பாய், இன்ப
நிறைவிற்குங் கருவான நெறிவகுத்த
நின் மலனை நெஞ்சில் வைப்பாம். (கூ)

மறை வணக்கம்.

10. இயற்கையினிற் பூத்திலகி யியற்கையினிற்
பழுத்தெழுந்தே யியல்பின் மாந்தர்
இயற்கைவழி நின்றுய்த்தே யின்பமொடுஞ்
சாந்தமுற வியைந்தவாறு,
மயற் குலத்தின் மாற்றாகி, வாழ்வினற
வூற்றாகி, மனுக்குலத்தின்
செயற் குலத்தை வகுத்ததொரு சியாத்வாதத் [17]
திருமறையைச் சிந்தை செய்வாம்! (ய)

அவை யடக்கம்.

11. யாரேனும் ஒரு சிறிது பூவுலகில்
அறம் வளர்த்தா ராகி லன்னோர்
பேரேயென் பாமலரின் மணமாகும்;
பேரின்பம் பிறங்கப் பூவிற்
சீரார னேகாந்த [18] மதமீந்த
கற்பகத்தைத் தேவ வாழ்வைப்
பாராரும் பாக்கியத்தை யன்புமனம்
பரபரத்தே பாடுமன்றோ? (கக)

---

17-18. சியாத்வாத மெனினும், அனேகாந்தவாத மெனினும் ஒக்கும். எந்த வஸ்துவையும் அதனுடைய பற்பல பர்யாயங்களால் அநேக விதங்களினால் அறியவேண்டு மென்பதாம்.

வேறு.

12. யானோ வோர்துளி யெண்ணமோ ஆழி,
அறிவி னெல்லை
யானே யாகும் அருகனைப் பாட
அருகனல் லேன் ;
ஏனோ நெஞ்செனை யித்துணை
யின்பிற் கிழுத்த தென்னில்,
தேனார் தத்துவ சூத்திர [19] முண்ட
திரள் மயக்கே! (கஉ)

வேறு.

13. கம்பருந் திருத் தக்க கவிகள் பால்
இன்ப மாகத் தவழ்ந்த விளந்தமிழ்
நம்பு பாத்திறல் நானறி வித்தலும்
அம்புகாற் [20] கங்கை யாமெனற் போலுமே! (கங)

14. வீணை முன்னர் வெறும்பறை யென்னுமோ
வர்ணி யன்பில் வழிந்த வரகவி
ஆணை யும்முளத் தார்வமு மார்கவி
மான மாப்புல வர்க்கு மணக்குமோ ? (கச)

15. வன்ம ழைப்பின் மரத்துளி போலவும்,
மின் மினித்திரள் விண்மதி முன்னென
பன்னு வோன்றிறம் பார்த்தவன் முன்னென
என்னு டைக்கவி யின்ப மளித்தலே. (கரு)

---

[19] தத்துவ சூத்திரம்—தத்வார்த்த சூத்திரம். இது ஸ்ரீமத் உமாஸ்வாமி அவர்களால் 2000 வருடங்களுக்கு முன்பு எழுதப்பட்டது. ஜைன சமய தத்துவங்கள் எல்லாம் 365 வடமொழி (ஸமஸ்கிருதம்) சூத்திரங்களில் கூறப்பட்டுள்ளன.

[20] நீரின் வாய்க்கால்.

16. சோதி முன்கை விளக்கின் சுடரென
ஆதி யன்னை யியற்கைமுன் ஆக்கிய
பேதைப் பிள்ளையின் பெட்பு மலை[21] யென
ஈது நிற்கு மிசையவர் முன்னரோ! (கசு)

17. ஆதலாற் றமிழ் மைந்தன் வரைந்த வில்
வோதை யோவியம் ஊன்பல வாயினும்,
வேத மைந்தமிழ் வித்தகரே பொறும்
பேதை யன்பிற் பிதற்றிய சொற்றடர்! (கஎ)

நூற் பயன்.

18. மங்கள மெங்கும் பொங்கும்,
மாதவச் சுடர் பிறங்கும்,
செங்கதிர்ச் சோதி சேரச்
செகமெலாம் அருள் விளங்கும்,
எங்கிலும் அமர வாழ்வே
யின்புறத் தங்கும்; வெற்றி
யங்கையிற் கனியைப் போன்றே
யாற்றிடும் பணியிற் சேரும். (கஅ)

19. உலகெலாம் உறவே யாகும்,
ஒடுங்கிடும் பகையும் போரும்,
இலகிடு மறமும் மன்பும்
இனியன வெல்லா மெய்தும்;
பொலிவுறு மான்ம சக்தி;
புகழுயர் வீர முண்டாம்;
நிலமகள் விண்ணு மேத்த
நிலவுவள் நீதியாக! (கசு)

---

21 பெட்பு மலை—குழந்தைகள் அன்புடன் செய்யும் மணல் மலை.

20. வறுமையும் மடமை தீரும்,
வருந்திடு மடிமை நோயும்
வெறுமையாய் முடியும்; மைந்தர்,
விளங்குவர் செல்வமெய்தி;
பொறுமையும், புகழுஞ் சீரும்,
புண்ணிய வாழ்வு மோங்கி,
மறுமையு மிம்மை நல்ல
மாதவம் பிறங்குமன்றே! (உ0)

21. பாரினிற் சுத்த சக்தி
பளிச்சிடும்; சுதந்தி ரத்தின்
வேரிது வாகும்; சாந்தச்
சமரசம் விளங்கும்; மாந்தர்
வீரராய்ப் பொலிவர்; நாடு
விண்ணினை வெல்லு மின்பில்
சீர் பெறும் ஜினனந்தத்
தெள்ளிய தேனை யுண்டால்! (உக)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய ஜினனந்தம்

பாயிரம்

முற்றிற்று.

---

## ௨. நாட்டணிப் படலம்.

22. ஆதியம் பொருளாய் ஆவிக்
கருள்சுரந் தவனி மீதே
சோதிமெய் வடிவாய் ஞானந்
துலங்கிடத் தூய்மை யாக
நீதிநன் னெறிவ குத்த
நித்தியச் சுத்த வீர
நாதன்வந் தவத ரித்த
நாட்டணி கூறு வாமே! (க)

23. காற்றுகு ழுலகிற் சம்புத்
தீவினிற் கதிர்விட் டோங்கிப்
போற்றரும் புகழிற் பூத்த
புண்ணிய பரத கண்டத்
† தூற்றமும் அறமு மோங்கும்
உத்தர விதேக மன்றோ
ஆற்றலு மருளு மான்ற
வையனைப் பெற்ற தன்றே. (உ)

24. ஆறணி வெளிகள், தோகை
யளியணிச் சோலை யெங்குஞ்
சோறணி பழனம், ஞானச்
சுடரணித் தவவ னங்கள்,
வீறணி மாந்தர், வேத
விதியணி யுயர்ந்தோர், உம்பர்
கூறணிச் சோதி பொங்குங்
கோயில்கள் விளங்கு நாடே! (ரு)

---

† புகழ், ஆற்றல்.

25. கலமரும் கடலுந் தேனின்
கசிவரும் பணைகள்; காமர்
அலரரும் குளங்கள்; புட்கள்
ஆர்ப்பரும் பொழில்கள்; வேத
வுலம்பரும் சாலை; ஆத்ம
வுரமரும் வீரர்; ஓங்கும்
நலமரும் பாடி, செய்ய
குணமரு நல்லோர் போலும். (௪)

26. சோதிபாய் இதயம்; அன்புத்
தொடர்பு பாய் மாந்தர்; ஆன்ற
நீதிபாய் அரசு; தூய
நினைப்பு பாய் ஒழுக்கம்; நல்ல
போதம் பாய் புலவர்; ஏமப்
பொற்பு பாய் மனைகள்; வீரக்
காதல் பாய் இளைஞர்; செல்வக்
கலைகள் பாய் திருவி னாடே! (௫)

27. உழுபடை கடவு மோதை,
ஓமெனு மிராட்டை யோதை
குழலொலியோடு புல்லும்;
கோகில வீணை கொஞ்சும்;
தொழில்களி னார்ப்பும், வேதத்
துதியுடை யாசி, வள்ளை
எழிலுடை வீடு தோறும்
எழுந்திசை முழங்குநாடே! (௬)

28. வேதிய ரோதுவித்தே
வித்தைகள் பயிலு நாதம்,
மாதிர மதிர வீரர்
மாகரி நடத்து மோதை,

நீதிப ரிகை, பெற்ருேர்
நீடுவாழ் கென்னு மாசி,
வீதிக டோறுங் கேட்கும்
விரிவினை நலஞ்செய் நாடே. (எ)

29. பாங்குறு விசும்பி னூடே
பாற்கரன் மழைவில் லென்ன,
“ ஓங்குக செங்கோ ” லென்றே
யொலித் தொளிர் புட்களாசி ;
வீங்கிடுஞ் செல்வ வாற்றின்
விளங்கிடு வணிக ரோசை ;
ஆங்கருங் கடலை நுங்கி
யணிவிழா வதிரு மம்மா ! (அ)

30. எருமைமேல் நாரை தூங்கும் ;
இலகுதா மரைமீ தன்னம் ;
திருவளந் திகழுந் தேசச்
செல்வமு மாங்கே வைகும் ;
மருதத்தில் மயங்கி விண்ணும்
மண்ணிலே வைகும் ; நீதி
நிருபரின் வாயல் ஆராய்
மணித்துரு நிறைந்து தூங்கும் ! (கூ)

31. பொன்விளை வயல்கள் மீது
பூங்கரும் போங்க, வாழை
இன்னிழற் பயிர்கள் மீதே
யிலகிடும் பொழில்க ளோங்க,
தென்னைபார் மாப லாவுந்
தேனுகுத் தோங்க ; ஓங்கும்

என்னையா ளுடைய சக்தி
யெழில் பெறுங் கோயி லம்மா ! (ம)

32. வளத்திடை மறையாள், செய்ய
வயலிடை யரம்பை, சாலி;
குளத்திடை யன்னக் கூட்டம்;
சோலையிற் குயில்கள்; மாந்தர்
உளத்திடை யமைதி; நல்ல
உறுதியு மறிவொ ழுக்கம்
அளத்தலுக் கரிய கற்பின்
அரிவையர் திருசெய் நாடே! (கக)

33. தத்தையும், பிகமும், பூவை,
சாதகம், கலிங்கப் புட்கள்,
முத்தமி ழன்றி வேறு
முயன்றிடாக் கீதம் பாடும்.
எத்திசை தனினும் பற்பல்
லியங்களு மெதிரொ லிக்கும்.
பத்தியாங் கவிகள் பாட்டுப்
பாரெலாம் பரவு மன்றே! (கஉ)

34. களச்சியர் கண்ணி னீழல்
கயலென நாரை கொத்தும்,
அளகத்தைப் புயலென் றாடுந்
தோகையு மழகாய்ச் செங்கை
முளரியென் றயர்ந்தே தும்பி
மொய்த்திடும்; பசிய வேனில்
இளவனப் பென்ன மாதர்
இலகிடு மின்ப நாடே! (கங)

35. முள்ரிளை யாளே செய்ய
முகமலர் வளர்க்க, அன்னம்
வளர்த்திட நடையை ; மின்னல்
வர்ணகை வனப்பை ; வேனி
லிளந்தளிர் மேனி மின்னர்
இந்நிலச் சேய்க ளோத்தம்
வனமுலை யமுதி னூட்டி
வளர்த்திடும் பசுவை யொத்தார். (கச)

36. கண்ணினல் மானே யாவார் ;
கற்பருந் த்தியே யாவர் ;
பண்ணினற் குயிலே யாவர் ;
பணியிற் பூ வணியே ; தோற்றம்
எண்ணினற் சுடரே யாவர்
இல்லற விளக்கே யர்வர் ;
வண்ணமாச் சோதி யன்னை
வடிவமை மாத ராரே ! (கரு)

37. திருவைய ரணிகள் பூட்டிச்
செழியகின் னரத்தை மீட்டி,
உருகிடத் தலைவன், யாழோ
டுறங்கிடக் கிள்ளை மீட்டும் ;
சுரும்புகள் விரியு மென்றே
தூங்கிடும் விழிகள் நோக்கி ;
இருதனம் பழங்க ளென்றே
இளங்கிளைக் குயில ழைக்கும் ! (கசா)

38. வனப்பெனுந் தேரி லேறி,
வாட்படை விழிகள் மின்ன,

தனக்கரி பொருத, முன்னே,
தழங்கணி முரச மார்க்க,
மனப்புலி தோற்ற வாண்கள்
மணிச்சுடர்ப் பூச்சி யாக,
அனங்கனின் படையே யாகி,
அணங்குகள் பொலிந்திட் டாரே! (கஎ)

39. பள்ளியின் நெல்லை யீந்து
பாடியில் வரகை யேற்று,
வெள்ளத்தின் வளங்கள் கொண்டே
வெற்புடைச் செல்வ மீந்து,
மள்ளருங் குறவர் ஆயர்
மறவரும் பரதர் தத்தம்
உள்ளத்தை நாட்டின் தொண்டில்
ஊன்றியே யொன்றி வாழ்ந்தார். (கஅ)

40. மணங்களும், நூற்று நெய்த
மதிப்பரு மணிகள், மிஞ்சு
முணவுகள், வாங்கப் பற்பல்
லுறவொடு முலவு வங்கம்
பணமலை குவித்து நிற்கும்;
பாரத நாவா யூர்ந்தே,
குணகுடக் கோளத் துள்ள
குரைகட லுழுகு மன்றே! (ககூ)

41. ஈதலில் மகிழ்வார்; தன்னந்
தனிமையி லின்பந் துய்ப்பார்;
சாதலிற் சட்டை மாற்றம்;
சனிப்பதிற் பிணியே காண்பார்;

ஓதலி லொழுக்கங் காண்பார் ;
உணர்வினி லருளே காண்பார் ;
மாதரி லன்னை காண்பார்,
மாதவ மாந்தர் நாடே! (௨0)

42. தொழில்வளஞ் சீர்த்தி யோடுந்
தொல்புவிக் களித்தாள் ; ஞான
மெழில்வளத் துண்மை காட்டி
யிப்புவிக் குயிரை யீந்தாள் ;
அழிவறு மறத்தி லாய
வழகுடை மதங்க ளீந்தாள் ;
ஒழிவறுஞ் சுதந்தி ரத்தி
லுயர்ந்தநாட் டன்னை வாழி ! (௨௧)

43. எவற்றிலும் முதியள் ; என்றும்
இளையளா மெங்க ளன்னை !
தவத்தினிற் படைத்த மைந்தர்
தன்முக மாகப் பெற்றாள் ;
சிவத்துடைச் செல்வி யன்பிற்
சிறந்தவள், திண்மை யாக
நவப்புது வுலகை யாளும்
நாயகி யன்னை வாழி ! (௨௨)

44. தத்துவத் தலங்க ளோடுந்
தனிப்பெரு வளங்க ளோடும்,
நித்தியப் பொருளி னோடும்,
நிதியொடும், நீதி யோடும்,
இத்தல முய்யு முண்மை
யிலகுறு மறங்க ளோடும்,

சத்திய யுகத்தை யாக்குந்
தனிப்பெரு மரசி வாழ்க ! (உ௩)

45. தருமத்தில் வெற்றி யான்ற
சத்தியந் தன்னில் வெற்றி !
கருமத்தில் வெற்றி, சொல்லிற்
கருத்திலும் வெற்றி ; ஆத்ம
மருமத்தில் வெற்றி ; வெற்றி
வாய்மையிற் றூய்மை யெங்கும் ;
திருமிகு வெற்றி பொங்குந்
தேசமாத் தேவி வாழ்க ! (உ௪)

வேறு.

46. இந்தப் புண்ணியக் கண்ணிய
நாட்டுடை யெழிலே,
சந்த தம்முனி யாழிலுங்
காற்றிலுஞ் சலியாத்
துந்துமித் தொனி யெழுப்பிடும் ;
தொண்டுடன் இதனின்
வந்தனை செயப் பிறந்தவர்
வழிவழி வாழ்க ! (உ௫)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய

ஜினனந்தம் நாட்டணிப்படலம்

முற்றிற்று.

---

## ௩. நகரணிப்படலம்.

47\. மண்டல மடந்தையின் வாண்மு கங்கொலோ!
தண்டலத் தரசியின் தாள மாலையோ!
வண்டலம் பினியநல் வனங்கள் சூழ்ந்திடுங்
குண்டல புரமெனுங் குரிசில் மாநகர்! (௧)

48\. முடிநெடு மிமயமே! முலையும், விந்தியம்!
அடியது குமரியே! அலர் இலங்கையாம்!
படியினிற் பாரதப் பரிதி நாட்டிலிக்
கடிநகர் பொட்டெனக் காணு மாங்கொலோ. (௨)

49\. கவினெலாந் திரண்டிதன் காட்சி யானதோ!
சுவையெலாந் திரண்டிதன் சோறு மாயதோ;
தவமெலாந் திரண்டிதன் றரும மாயதோ!
புவியெலாந் திரண்டிதன் புகழை யோதுமால்! (௩)

50\. பலமரத் தொகுதிகள் பழுத்து குத்திடும்
அலர்களி னடுக்கடுக் கமைந்த மெத்தையே!
மலருகுந் தேன்மழை மாத வத்தினுல்
இலகுறு மிறையவர் இன்சொல் மானுமே! (௪)

51\. புனல்வளம் பயிர்வளம், பூவ ளங்களும்,
*கனல்வளம், வரைவளம், கவிவ ளங்களும்
தனவளம், தொழில்வளந் தரும நல்வளம்
வனவளங் கலைவளம் வயங்கி யோங்குமால்! (௫)

52\. அரிகதிர் கடலுடை யாவி நூலினுற்
கருமுகி லுடைசெய்து கற்கள்† சூட்டியே,
விரிதர மதுமழை விழுந்து மேதினிக்
கரும்பசு மாடைகள் அணியு மாமரோ! (௬)

---

* கெம்புக்கள்.

† கற்கள்=மலைகள்.

53. மீமலை யருளென வீழு மாறுபோய்
வாமரொண் பயிர்வள ரன்னை மானுமே!
பூமிசை யேரியிற் புணையில் வீரர்கள்
போமிசை கேட்டிடப் புகுந்து பாயுமே. (௭)

54. நதியொலி, புள்ளொலி, நாட்டுப் பாட்டொலி
அதிர்முர சொலியுடன் ஆர்க்கும் வாழ்த்தொலி,
சதிர்பெறும் பவனியுந் தழங்கு மோதைமேல்
துதிபெறுந் தொல்மறை தொனிக்கு மாங்கொலோ.

55. பலதொழிற் சாலையிற் பாயு மோதையுங்
கலகல வெனக்கடைத் தெருவி னோதையும்,
பலபல மங்கலப் பல்லி யத்தொலி,
நலமுள கூத்தொலி நகர மெங்கிலும். (௯)

56 வினைவிதை யறப்புனல் மேவி நற்கலை
நனிவளர் முளைகளே நாற்பு றத்திலும்
மனைமனைத் தொழிற்கிளை வாய்ந்து ஞானமாம்,
கனிபழுத் தின்பமே காணு மாணகர். (௰)

57. அருந்தவப் பொழில்களுக் கழகு செய்திடும்
குருகுலச் சாலையிற் குமரர் நோன்பொடும்
திருவுடைத் தெளிகலைத் திகழும் வீரராய்
இருநிலச் சுடரென விலங்கி யோங்குவார். (௧௧)

58. தெவ்வரை யன்பினுற் செயிக்குந் திண்மையர்;
வெவ்விய தீமையை வெல்வர் நன்மையால்;
செவ்விய தொழிலுடன் சிந்தை தூயவர்;
இவ்வுல கணியென வெழில் சிறந்தனர். (௧௨)

59. அருந்தவச் சாலைகள் அறம டங்களும்,
விருந்துடைச் சாலைகள், வித்தை மாடங்கள்,
மருந்துடை யியற்கையி னில்லம் ; மங்களப்
பெருந்தகைச் சடங்குகள் பிறங்கு மாளிகை. (கங)

60. கோட்டமுஞ் சங்கமுங் கொற்ற வீரரின்
தோட்டமும் மன்னவைக் கொடிப்பு ரங்களும்,
ஆட்டமும், பாட்டுட னணிசெய் கூடமும்,
நாட்டத்தி லமுதுக நனிவி ளங்குமால் ! (கச)

61. ஐந்திணை யடக்கிய வான்ம வீரர்கள்,
ஐந்திணை[1] யாளுறு மாண்மை வீரர்கள்,
ஐங்கட[2] னுடன்மனைக் கணிசெய் வீரர்கள்,
ஐந்துயிர்க்[3] கன்புசெய் தருளின் வாழ்ந்தனர். (கரு)

62. ஊன், மது, மணஞ்சுவை, யூறும், போகமும்,
தானெனு மகந்தையுஞ் சினமுந் தள்ளியே,
நோன்பினி லொளியுடன் நூலி னின்றனர்,
வானவ வாழ்வினில் வளரு மந்தணர். (கசா)

63. உண்ணலு மீனலும் ஊட லுக்குமே
லெண்ணமுந் தூயவர் எழில் சிறந்தவர்,
கண்ணெனுங் கருணையர் ; காசினிக் கிதம்
பண்ணுவர் வன்றவப் பரிசி னலரோ ! (கள)

---

1 ஐந்திணை—நெய்தல், குறிஞ்சி, முல்லை, மருதம், பாலை.

2 ஐங்கடன்—வழிபாடு, சுத்தோபதேசம், ஆருயிர்ப்பணி, முன்னோர்பணி, ஆத்மமுயற்சி.

3 ஐந்துயிர்—ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர்.

64. மகப்பெய ரிசைந்துழி மனையொ டொன்றுவார் ;
அகப்பெருந் தூயரா மறிந்த நற்றவர் ;
உகப்புறப் பொதுப்பணிக் குடலை நல்குவார் ;
சகப்பெரும் பொறையினுஞ் சாந்த ரானவர். (கஅ)

65. பிறன்மனை தாயெனப் பிறன்பொன் னோடெனப்
பிறன்றுயர் தனதெனப் பேணும் பெட்பினர் ;
அறந்தனக் குயிரினு மன்பு செய்குவார்
திறம்பல வாய்ந்தவர், தேவரானவர். (கசு)

66. வன்னியாய்ப் பற்கலை வாண ராகிப்பின்,
இன்னிய மனையற மியல்பி னூற்றுவார் ;
தன்வழி மனம்படுந் தனிய ராகியே,
துன்னுவர் துறவரச் சுடரி லொன்றுவார். (உ0)

67. பத்தினிக் கடவுளர் பதியின் சேவையே
நித்தியக் கடனென நெறியி னூற்றுவார் ;
சுத்தமுங் கற்புடைச் சுடரும், மெய்ப்பொருள்
வித்தையுந் தெளிந்தவர் விதியும் வெல்லுவார். (உக)

68. விரதமுஞ் சீலமும், மென்மை யின்பமும்,
பரதமும் பத்தியும், பாட்டுங் காதையும்,
அரதனத் தொளிர்நிற வழகும், வாய்மையும்,
விரவிய பொலிவினர், வேற்கண் ணாளரே ! (உஉ)

69. மனைமனை யிசையொலி மாத வத்தினர்
முனிவரை யெதிர்கொளும் முழக்கம் முவ்வனல்,
வனிதையர் கற்பொடு வயங்கு மங்கலப்
புனிதரி னிருக்கையிற் பொலியும் பொற்பரோ. (உங)

70 வாழுக வுலகெலாம்! மாதர் கற்பெழில்
சூழுக! சக்தியே சுடருகுத் தென்றும்,
ஆளுக உலகினை அமர வாழ்வுடன்,
நீளுக வின்பமே நிறைத வத்தரால்! (உ௪)

71. மஞ்சது படிந்திடு மாளிகை களில்
அஞ்சறு வீரரி னழகி லோங்கிடுங்
கொஞ்சிளம் மனைவியர் குயிலி சைகளும்,
பிஞ்சிளம் பிள்ளைகள் பேசு மின்பரோ! (உ௫)

72. மார்புடைத் ததிர்ந்திடு மற்ப யிற்சியிற்
பேர்படைத் தரியினைப் பிழைக்குங் காளைகள்;
வீரர்கள் முழக்குடன் வெற்றி யோடுயர்
தேர்பரி யானைகள் செலுத்தி யோங்குவர். (உ௬)

73. மலையையுந் தகர்த்திடு வலிய தோளினர்
பொலிந்தனர் பொற்பொடும் பொறையும், நீதியும்,
விலகரும் புகழொடு வீரச்செல்வமே
யிலகுற வாண்டனர் இருநி லங்களும். (உ௭)

74. ஏருயர் ஆண்மையர், இசை மிகுந்தவர்,
ஆருயிர் நாட்டினுக் கர்ப்ப ணித்தவர்;
ஓர்கணை யாலுல கொடுக்க வல்லவர்;
சீருயிர் ஆற்றலாற் செயத்தை நாட்டுவார். (உ௮)

75. மீமிசைச் சாளரம் வைகும் மெல்லியல்
ஓமப்புட் சினைவெடித் துட்பு குந்ததைப்
பூமருங் குஞ்சுகள் பூவை மார்களின்
மாமதி முகத்தினுல் வானென் றெண்ணுமால்! (உ௯)

76. சந்தன வனமுலைச் சாந்து நாணமுஞ்
சுந்தரத் திருவையர் சுருள் மணந்தருங்
கந்தமுற் றுவிழீ தெழுந்து கம்மெனும்
அந்தர மழைவிழுந் தகில மெங்குமே! (௩௰)

77. கொடைகளும் மணங்களுங் கொற்ற நற்றெழிற்
படைகளின் குதிகளும், பல்லியங்களும,
இடையிடைப் பவனியும் இனிய நங்கையர்,
நடையணிக் காட்சியும், நல்வி ருந்தரோ! (௩௧)

78. சிந்துர வீரரின் செய்ய செல்வமும்,
சுந்திர வணங்குகள் துலங்கு மாளிகை,
அந்தமும், போகமும், அளகை வென்றுமேல்
இந்திர னுலகினும் இலகி யோங்குமால்! (௩௨)

79. பயிர்த்தொழில், வாணிபம், பசுவ ளர்த்தலும்,
இயற்றொழி லாயமை யிப்பர் நீர்நில
முயற்சியி னெய்திய முதல் வளர்ந்திடப்
பயிற்சியிற் றிரிகுவர் பரபரப்புடன். (௩௩)

80. பொன்னொடு வெள்ளியும் பொங்கி யாடிடும்,
கிண்கிணி யொலிசெயுங் கீர்த்திச் செல்வமே
திண்ணென வெங்கினுஞ் செறியும் வாணிபக்
கண்ணிய முதலவர் கடைக ளோறுமே! (௩௪)

81. நன்மதிப் பெய்தினர், ஞால மூட்டினர்,
பொன்மதிக் கரும்பணி பூணும் மேழியர்,
மன்மதிப் பெய்தினர், வாழப் பைம்பொருள்,
மண்மதித் தாண்டனர் வாழ மன்னுயிர். (௩௫)

82. முத்தமிழ்ச் செல்வர்கள் முதலி யார்களே,
இத்தல முழுதையும் ஏரிற் ருங்கினர்,
உத்தமர், வண்மையர், உழைப்ப ணிந்தவர்,
பத்தியாய்ப் பயிர்களைப் பாலித் தோங்கினர். (ருசு)

83. குணவினைப் பிரிவினை கொண்ட மாந்தரே,
இணையொடுந் துணையொடு மின்புற் ரேங்கினர் ;
அணியொடு மமர்வொடு மாற்றினர் புவிப்
பணிகளை யொன்றியே பனசம்[4] போலுவார். (ருஎ)

84. முறைமுறை யறங்களை முரண்விட் டாற்றினர் ;
குறையிலர் அன்பொடுங் குலவி வாழ்ந்தனர் ;
வறுமையு மடமையு மடிமை நோய்களும்,
வெறுமையு மற்றனர், வீர வாழ்வினர். (ருஅ)

85. விண்ணிலை யிதுவொளி விண்ண தாதலின்,
மண்ணிலை யிதனலம் விண்ணை மானுமால்,
கண்ணிலை கண்ணுறக் காட்சி முற்றுமே
எண்ணிலை யிதன்றிரு விலகு சீர்த்தியே. (ருகூ)

86. இந்நகர் போன்றதே யியல்பின் மற்றெலா
நன்னக ரென்னிலும் நற்றவ த்தினற்
பொன்னொளிப் புனிதனைப் பூவிற் கீந்ததால்
எந்நக ரிதற்கிணை யியம்பு வேனரோ! (சo)

87. அண்ணலை யடைந்த திவ் வமர நன்னகர்
மண்ணில மாந்தர்க்கு வான நாடரோ ;
பொன்னக ரிதற்கொரு பொருளு முண்டரோ ?
அன்னதிவ் வரசுடை யழகு நோக்குவாம். (சக)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜிஞனந்தம் நகரணிப்படலம்
முற்றிற்று.

---

4 பனசம்—பலாமரம்

## ச. அரசணிப்படலம்.

88. அத்தொன்மை யூரை யருளேற்றி, யாண்மையோடும்,
எத்துன்ப மின்றி, யிருள்போக்கி யின்பி ளுளும்
முத்தூய்மை யுற்ற முடிமன்னன் யாவ னென்னிற்
சித்தார்த்தன், செவ்வித் திரிசலைக்[1] கேள்வன்
மாதோ! (க)

89. ஆறாத வீரம், அரிநாத மன்னர் மன்னன்;
கோணாத நீதி சருவார்த்தன் கொற்ற னோன்பால்
தேனார் மொழிச் சீமதி[2] தேவி யோடு பெற்ற,
ஜீனன்[3] செய்யன் திருமிகு மைந்த னன்றோ! (உ)

90. எச்சாத சூரர் இணையற்ற விக்கு வாகர்[4]
லிச்சாவி மன்னர் இலிபித்த[5] நீதி போற்றி,
அச்சாதி யின்றி யறமாற்றி யாளு நீர்மை
நற்சாதி வேந்தர் நலமுறு சீர்த்தி யன்றோ! (ங)

வேறு.

91. அன்பதே படையாய், ஆன்ற
வறமதே யரணாய், மாந்தர்
இன்பதே முடியாய்த் தீமை
யிகலறு மிசையே தாராய்,

---

1 பிரியகாரிணி என்றும் பெயர்.

2 ஸ்ரீமதி

3 ஜீனன—ஜைனஞன

4 இக்ஷ்வாகு வம்சத்தார்.

5 நியமித்த

நண்பதே கொடியாய் ஏற்ற
நற்புகழ் முரசே யாகப்
பண்பதே பிறங்க மன்னன்
பாரினை யாண்டான் மாதோ ! (ச)

92. செங்கதிர் முகமும், வாழ்க்கைச்
செம்மையும், வாகையாலே
பொங்கிடு மார்பு மாங்கே
பொலிந்திடு மருளு மன்பும் ;
சிங்கத்தை வென்ற வீரத்
திண்புயச் சிலையும், இன்னோன்
மங்கள வாட்சிக் கேற்ற
மங்கல நாணே யன்றோ ! (ரு)

93. அறக்கட வுளேயே யன்னான் ;
ஆணுருப் பெற்ற வாணி
சிறப்புட னிவனே யென்னச்
செவ்விய கலைக டந்தோன் ;
இரக்கமுங் கமையு மல்கி
யீகையின் முகிலே யானான் ;
உறக்கமு மின்றி யிந்த
உலகினைக் காத்திட் டானே ! (சா)

94. பொறுமையிற் பூமி போல்வான் ;
பொலிவினிற் கதிரே போல்வான் ;
மறலியே[6] பகைவற் காவான் ;
மாதற்கு மதன னாவான் ;

---

6 மறலி=இயமன்

4

உறவினிற் ருயே யாவான்;
உளத்தினிற் கருணை யாவான்;
திறமைசேர் அருளுங் காப்புந்
தெரிந்திடில், நேமி யாவான். (எ)

95. கல்விக்கோர் உறையு ளாவான்;
கற்பகக் கைய னவான்;
செல்விக்கோ ரிருக்கை யாவான்;
செவ்விய குடிகட் கென்றும்
அல்லலிற் கையே யாவான்;
அன்பினி லன்னை யாவான்;
செல்வனும் வறிய ருக்கு;
சேவகன் நாட்டிற் காவான்! (அ)

96. தாதையே போலுங் காப்பில்,
தாயினைப் போலப் பேணித்
தீதினைத் தீர்க்கும் போது
திறமுள பிடக[7] னைப்பான்;
போதத்தைப் புகட்டுங் காலை,
புதனையே யன்னுன்; அன்பின்
ஈதலில் முகிலே போன்ருன்;
இறைவன்சித் தார்த்தன், மன்னே! (கூ)

97. குடிகளுட் குடியே யாவான்;
கோக்களுட் கோவே யாவான்;
அடிகளுக் கடியா ராவான்;
அருந்தவக் கொளுந்தே யாவான்;

---

[7] பிடகன்—வைத்தியன்

படியினில் ஒன்றிப் போடும்[8]
பரிதிபோ லிலகி யாண்டான் ;
துடியிடக் குடிகள் நன்மை
தாமன மலரிலம்மா ! (கப)

98. அன்னமே நடையில்; பேச்சி
லமுதமே ; வடிவிற் கோடி
மின்னலே ; முகத்திற் செய்யாள்
மென்மையி லனிச்ச மானுள் ;
கன்னலே காதற் காவள் ;
கற்பிற்சந் தணையே யாவாள் ;
மன்னவன் றேவி யானுள்
மானிலத் தாயே யன்னுள். (கக)

99. நாரிகள் முறையைக் கேட்டே
நாயகர்க் குரைத்தே தீர்ப்பாள் ;
பாரினிற் பாதி தாங்கிப்
பதிக்குநற் றுணையே யானுள் ;
பேர்திரி சலைவி தேகன்,
சேடக வரச னீன்ற
சீருயிர்ச் செல்வி யாவாள்
சீலமுந் தவமுஞ் சேர்ந்தாள் ! (கஉ)

100. பாலொடுந் தேன்க லந்த
பான்மையி னில்ல றத்தைச்
சீலமுங் களிப்பும் பொங்கச்
செவ்விய வறமே மல்க,

---

8 ஒன்றிப் போடும்=ஸமரஸத்துடன்

ஞாலமே சேய்போல், ஆட்சி
நல்வினை விரத மாகக்
காலமெய்ப் பணியி லேகக்
காதலர் வாழ்ந்தார் மாதோ! (கங)

101. தன்னலம் விடுத்த சான்றோர்
தகைபெறுங் குடிகள் நெஞ்சே
நன்மன மானோர், ஆவி
நாட்டுடை மாண்பே யாவர்,
அன்பறி வாற்றலு ண்மை
யமைவுறு மறத்தினுளர்.
நன்னெறி யுரைக்கும் வீரர்
நடுநிலை யமைச்ச ரானோர். (கச)

102. கால்பல வாகி யாறு
கண்ணிலஞ் செழிக்கப் பாயும்
போல்பல வூழி யர்கள்
பூவுல கிதத்தை யாற்றிக்
கோள்மடி மாயை யற்றார்;
குணநிறைக் குடிகள் நேயர்
சால்பொடு நாட்டி னன்பும்
தன்னர சன்பும் பூண்டார்! (கரு)

103. தன்னது பரிச னங்கள்
தயையொடும் பரிவினோடும்,
மன்னுயிர்த் தொண்டு செய்ய,
மன்னனுந் தொண் டனாக,
ஒன்னலர்[9] கள்வர், மாக்கள்,
ஒருவருந் துயர்செய் யாமல்,

---

[9] ஒன்னலர்—சத்துருக்கள்.

இன்னலே இல்லா தாண்டான்,
இணையிலாச் சமயம் போற்றி. (கசு)

104. சுற்றியே தேய மெங்குங்
குறைகளைச் சோதித் தோதக்
கற்றறி யொற்றர் தம்மைக்
காவலன் அமைத்திட் டானே!
குற்றங்கள் தெரிவான்; உண்மை
குணித்தறம் புரிவான்; நல்ல
பற்றுடன் பாரை யாண்டான்
பரதனே யொப்ப மாதோ! (கஎ)

105. உழைப்பவர் நன்மை யெய்த
உலகொடு பொருளு மீவான்;
தழைத்திடத் தரும மென்றுந்
தந்தனன் பொருளையள்ளி;
ஒழித்தனன் வறுமை; ஞான
வொளியினல் விளங்க நாடு
வழிபல நாளுஞ் செய்தே
மன்னுயிர் மகிழ்வித் தானே! (கஅ)

106. காவலுஞ் சுகமுஞ் சீருங்
கல்வியுந் தொழிலு மோங்கத்
தேவைக்கு மேலே யுள்ள
தேட்டத்திற் கிறையே யேற்பான்;
தேவைக ளுள்ளோர்க் கீவான்;
சிந்துநீர் புயல் முகந்து
பூவினுக் கீவ தேபோற்
புரவல னுதவி னனே! (ககூ)

107. செந்தணர், ஆவுங் கற்புச்
　　செவ்வியர், கல்வி யாளர்,
சிந்தையிற் றூய நல்லார்,
　　சீரிய முனிவ ரர்கள்,
முந்துய ருழவர், தூய
　　முயற்சியிற் பயிற்சி செய்வோர்,
சந்ததம் மகிழப் பூவைத்
　　தருமத்தோ டாண்டான் மாதோ ! (உ0)

108. மாதவர் தவமுந் தூய
　　வன்னியர்[10] விரதக் கல்வி
ஆதிநா தன் வகுத்த
　　அங்கங்கள்[11] விளங்க வெங்கும்
ஊதிய வணிக ரீட்ட,
　　உழவரும் பயிரைப் பேண,
மாதரார் கற்பைக் காக்க
　　மன்னறங் காத்திட் டானே ! (உக)

**வேறு.**

109. திருவும் வீரமுஞ் சாந்தமுஞ்
　　செப்பருந் தொழிலும்
மருவு மங்கல மனையறம்
　　வாழ்வகை வாழக்

---

10 பிரம்ம சாரிகள்

11 அங்கங்கள் பன்னிரண்டு. அவை ஆசாராங்கம், சூத்ர கிருதாங்கம், ஸ்தானாங்கம், ஸமவாயாங்கம், வ்யாக்யாப் பிரக் ஞப்தி யங்கம், ஞாத்ருகதாங்கம், உபாஸகாத்யயனாங்கம், அன்தக்ருத தசாங்கம், அனுத்தரோப பாதிக தசாங்கம், ப்ரஸ்ன வியாக ரணாங் கம், விபாக சூத்ராங்கம், திருஷ்டிப் பிரவா தாங்கம் என்பனவாம். இவை ஜைனசமய சித்தாந்தங்களை விரிவாகக் கூறுகின்றன.

கருவு மாகிய கல்வியைக்
கடனெனப் பரப்பிப்
பெருமை யாய்ப்புவி பேசிடும்
புகழுடன் புரந்தான். (௨௨)

110. மண்ம தித் தனர் ; பயிர்வளம்
வளர்த்தனர் ; மாந்தர்
கண் மதித்தனர் கலப்பையை ;
கானரா ட்டினத்தின்
பண்மதித்தனர் ; பஞ்சினை
மதித்தனர் ; உழைப்பை
நன்மதித்தனர் ; நலிவற
நலமுற வாழ்ந்தார் ! (௨௩)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் அரசணிப்படலம்
முற்றிற்று.

---

# ரு. கருப்புகு படலம்

111. நல்லறத் துணைவர்கள் நாளுந் தூயராய்
அல்லல்போம் காட்சியும், அறிவொழுக்கமும்,
தொல்வினை யகற்றிடச் சுதந்தி ரம்பெற,
இல்லற நெறியினை யிசைந்து காத்தனர். (க)

வேறு.

112. ஒன்ப [1] தாறொடு [2] மைந்து [3] முணர்ந்தவர்,
பன்னி ரண்டைப் [4] பழுதின்றிக் காத்தனர்,
பன்னு நாற்கதிப் பான்மை யறிந்துதம்
மன்னுயிர்க் கிதஞ் செய்தனர் மாண்மையாய் (உ)

113. மதிமறை யறிவினில் வல்லவர் மனைப்
பதினொரு படி [5] தனைப் பழகி வந்தனர்,
மதுதசை நசையொடு மனது மெண்ணிலர்;
புதுப்புது மகிழ்வுடன் பொலிந்து வந்தனர். (ங)

---

[1] ஒன்பது-நவபதார்த்தம்.

[2] ஆறு-ஷட்திரவ்யம்.

[3] ஐந்து-பஞ்சாஸ்திகாயம்.

[4] பன்னிரண்டு=12 விரதங்கள். அவை அணுவிரதங்கள் ஐந்தும், குணவிரதங்கள் மூன்றும், சிக்ஷாவிரதங்கள் நான்குமாம்.

[5] பதினொருபடி-பதினோரு சிராவக பிரதிமைகள் அல்லது நிலைகள். அந்நிலைகளில் இருப்பவர்களை முறையே தரிசனப் பிரதிமன், விரதப்பிரதிமன், சாமாயிகப்பிரதிமன், புரோஷதோபவாசப் பிரதிமன், சச்சித்ததியாகப்பிரதிமன், ராத்திரிபுக்ததியாகப் பிரதிமன், பிரம்மசர்யபிரதிமன், ஆரம்பதியாகப்பிரதிமன், பரிக்கிரக தியாகப்பிரதிமன், அனுமதிதியாகப்பிரதிமன், உத்திஷ்ட தியாகப்பிரதிமன் என்று கூறுவர்.

வேறு.

114. தரிசனம் விரதந் த்யானம்,
பட்டினி சத்வ வுண்டி,
இரவிலுண் ணுமை, வன்னி[6],
இப்புவித் தொடர்ப டக்கல்,
வரவர வுலகை நீத்தல்,
தனிமை, வன் றவமு மான
சிரவகப் பிரதிமைகள்
செயல்பெற முயன்று வந்தான். (ச)

வேறு

115. ஐவரை [7] வணங்கி நாளும்
ஐயணு விரதம் [8] போற்றி,
ஐவரை [9] யறுவ ராக்கி,
ஐம்பெரும் பிழை [10]த விர்த்தே,
ஐவகை யுயிர் [11]கட் பேணி,
யகிம்ஸையே யறமென் றூற்றி,
உய்வகை யறிந்த சீலர்
உயர்வினை யுரைக்கப் போமோ! (ரு)

---

6 வன்னி-பிரம்மசரியம்

7 பஞ்ச பரமேஷ்டிகளை

8 ஐயணுவிரதம்-ஐந்து அணு விரதங்கள். அவை அஹிம்ஸை சத்தியம், அஸ்தேயம், பிரம்மசர்யம், அபரிக்கிரஹம் என்பன.

9 ஐவரை-ஐம்புலன்களை.

10 ஐம்பெரும்பிழை-பஞ்சமகாபாதகங்கள்.

11 ஐவகையுயிர்-ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர், ஐயறிவுயிர்.

116. மக்கள் வாழ்த்தொலி மகிழ்வொலி,
மங்கல வொலியே,
மிக்க வெங்கிலு மெழுந்திட,
மேதினி யாண்டான்;
தக்க மாதவர் துணைசெயத்
தருமங் கை தரவே,
துக்க மொன்றில னேனுமோர்
துயர் சிறி துளதால்! (சா)

வேறு

117. வாமரோண் வனப்புடை வடிவு மின்னலாள்;
தாமரைத் தடங்கணாள், தளிர்க்கை வல்லியே,
பூமரும் புண்ணிய வினைகள் யாவையுந்
தாமுருக் கொண்டெனத் தழைக்குங் கற்பினாள்! (எ)

118. பாலொடு தேன்மொழிப் பண்ணினாள்; இடை
நூலினும் மெல்லியாள்; நூபு ரங்களே,
காலுள ததிர்ந்திடும் கவன மென்னடைச்
சேல்விழித் திரிசலைத் திருவை யென்சொல்கேன்! (அ)

119. அணிக்கணி செய்திடு மழகி யுட்புறப்
புனிதநற் கற்பினாள் பொலிவை யோதவோ!
கணிக்கருந் தூயவக் கடவுட் சோதியே
மணிவயிற் றிலகிடு மாண்புற் றுளன்றே! (கூ)

120. பன்னரும் பாக்கியம் படைத்த செய்யவள்;
இந்நிலக் கதிரன்னாள்; எங்குந் தூயவள்;
அன்னையென் றவனியே யடிப ணிந்திடற்
கென்னினி யிவளினு மினியள் யார்கோலோ. (ய)

121. மன்னுயிர் வாழ்ந்திட வாழ நல்லறம்
இன்னுயிர்த் தேவரை யீன்ற சோதியீர்,
என்னுடை மனமலர் இணைக வுங்கழல் !
அன்னையீர் வாழிய, அவனி காத்தநீர் ! (கக)

122. விழிகளுந் தூயன வினைகள் தூயன,
மொழிகளுந் தூயன முழுது மெண்ணங்கள்,
பழுதில ரின்னவள் பாதப் போதினில்,
தொழுதிடின் என்னினிச் சொல்லு கேனரோ! (கஉ)

123. இத்தகைத் தூயவட் கின்ப முற்றுற
எத்தகைத் தேவர்க்கு மிறைவ னனவோர்
சுத்தனே யச்சுத கற்ப கந்துறந்[12]
தித்தலத் திவளகட் டிலக வெண்ணினன் ! (கங)

124. இல்லற நெறியினை யினிது காத்தனள்,
நல்லியல் நாயகி நற்றவம் பெறும்
இல்லினுக் குயிர்தர எனை மன்னுயிர்க்
கெல்லையி லருள் செய விதயத் தெண்ணினன் ! (கச)

125. பூதலத் தொப்பிலாப் பொங்கு சீர்த்தியால்
நாதரின் மரபொளி பெருக, நற்றவச்
சோதியா யன்னையின் தூய கோயிலுட்
போதலுங் கருவினிற் பொலிந்து தோன்றினன்! (கரு)

126. உலகெலா மொப்பரு முவகை தூண்டிட,
நிலமகள் புதுவொளி நிலவ நின்றனள் ;
இலகுறு மிமயவ ருலகு மெங்கிலும்,
அலவறு மதிசய மன்று கண்டனர் ! (கசு)

---

12 அச்சுத கற்பம்—பதினாறு கல்ப லோகங்களில் பதினாறாவது. அவற்றுள் மிகச் சிறந்தது, உச்சியிலுள்ளது.

127. ஆடினர் தேவர்கள், அவனி யின்றுயர்
வீடிய தென்றுளம் விம்மு நீர்மையால்,
ஓடினுர் ! உவகையின் உண்மை யோர்ந்திடத்
தேடினுர் தெரிந்தவர் செப்பு கென்றனரே ! (கஎ)

128. வாழிய திரிசலை ! வாழி மன்னனே !
வாழிய நாதரே ! வாழி குண்டலம் !
வாழிய விதேகமே ! வாழி பாரதம் !
வாழிய வையகம் ! மன்னு யிர்களே ! (கஅ)

129. அரதனக் கூண்டினி லவிர்[13] பொற் சோதிபோல்,
தெரிவையின் கருவினிற் றெரியத் தேசுறும்,
வரதனை வணங்கினன் வாசவன் னுடன்
துரிதமென் றமரரைத் தொழ விடுத்தனன் ; (கசூ)

வேறு.

130. இந்திரன் செம்பொன் மாரி
ஏழரைக் கோடி பெய்தான் ;
அந்தரத் தேவர் ஆசி
ஆர்த்துபாற் கடலி னீரால்,
துந்துமி முழங்கச் சேயைச்
சுமந்தவள் தமைநீ ராட்டி,
சுந்தரப் பூண்கள் சூட்டித்
தொழுதனர் சிறப்புச் செய்தே ! (உ0)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜிஞனந்தம் கருப்புகு படலம்
முற்றிற்று.

---

13 அவிர்—விளங்கும்.

## ௬. கனவுகாண் படலம்.

திரிசலை உறக்கம்

131. வாணிலாப் பால் சுரக்க
மனமகிழ் வூட்டுந் திங்கள்,
நீணிலா வொளியிற் பூத்து,
நிறைகளிப் பெய்தி யாடிக்
கோணிலா நீதி மன்னன்
கோதிலா துட்க ளிக்கக்
காணிலாக் காட்சி யன்னை
கண்வளர் மாடஞ் சென்றாள்! (க)

132. வீசிளங் காலுமாட,
விளங்குறு மாடித் திங்கள்
பூசிடப் பூவிற் சந்தம்
புண்ணிய வுத்திராடம்
தேசுறுத் திருமி குந்த
வணங்குகள் சேவை செய்ய,
வாசநாண் மலர் விரிந்த
பள்ளியில் மலர்க்கால் வைத்தாள், (உ)

வேறு.

133. அடிமலர், கைமலர், அழகு வாண்முகக்
கடிமலர், தனமலர் கண்மலர் களும்,
முடிமலர், மலரணை முத்தங் கொஞ்சிட,
படிமலர்ப் பள்ளியிற் பாயல் கொண்டனள், (௩)

134. மழலையுங் காதற் பெண்ணின்
மகிழ்தரு குரலும், தெய்வக்
குழலையுங் காத லின்பங்
குலவிடு வோர்க்குத் தென்றற்

கிழமையும், வெண்ணி லாவுங்
 கிள்ளையுங் குயிலும் போன்றே
எழுப்பினர் அமரப் பெண்கள்
 இன்னிசைக் கீத மம்மா ! (௪)

135. திருத்தகு வீணை மீட்டித்
 தெவிட்டரு தேனுங் கைக்க,
சரிக்கம பதனி யென்னுஞ்
 சரளியி லடங்குங் கீத
முருக்கினர் ; காதி னூடே
 யுள்ளத்தி னமுத வாற்றைப்
பெருக்கினர் பாய்ச்சி யாங்கே
 பேரின்பஞ் செழிக்க மாதோ ! (௫)

136. அன்றலர் மரைமு கத்தார்
 அப்பிடக் களபச் சாந்தம்,
துன்றிட நறும்பு கைகள்,
 தோகையர் அடி பிடிக்க,
மன்றலுக் களைத்த லைத்தே
 மதியினைப் புகழ்ந்து பாடுந்
தென்றிக்கு மண விருந்தே
 செய்துகண் வளர்ந்தா ளன்னை ! (௬)

137. புலன்களு மயர, தூங்காப்
 புந்தியின் விழிகள், உள்ளே
இலகுறுந் தெய்வந் தன்னை,
 இமைத்திடா தெண்ணித் தாயை
விலகிய சாமம் மூன்றில்
 மெய்மறந் துறங்கச் செய்ய,

நலமுறு நான்காஞ் சாமம்
நற்கன வளித்த தன்றே ! (எ)

வேறு

138. கரியும், காளையும், சிம்மமும்,
கமலையும், மாலே,
விரிமதிப் பகல், மீன்கள், கும்
பம், சுனே, கடலும்,
அரியணை, விமானத்தொடு,
பவனமும்[1] மணியும்[2] ,
எரியு மாயவெண் ணிருபொருள்
இலகின முறையால் ! (அ)

139. பீடு யானை தன் பிறைமுகம்
புகுவபோற் கண்டாள் !
தோடித் தேவர்கள் துந்துமி
துவைப்பதைக் கேட்டாள் !
நீடு நற்கன வதிசயம்
நின்றதும் விழித்தாள் !
ஈடிலா மகிழ் வியற்கையி
னுதித்திட மனதில் ! (கூ)

140. எழுந்து சேடியர் புட்களோ
டிசைபல பாடி,
முழங்கு பல்லியம்
மூரியை யேய்த்திடக் குழுமித்

---

1 பவனம்—நாகபவனம்.
2 மணி—இரத்தினக்குவியல்.

தொழுது தேவியைத்
தூமலர்ப் பள்ளியை நீக்கி
அழகு சோலைவாய் நடத்தினர்
அணிநடைத் திருவை ! (ய)

வேறு.

141. இன்னிய கனவினில் எண்ணம் மூழ்கிய,
அன்னமும் நறும்புன லாடிச் சூடியே,
பொன்னணி மணிகளைப் பொலிய வைத்துடன்
மன்னன்பால் வியப்பினை வணங்கி யோதினள். (கக)

வேறு.

142. சொல்லி மூந்த துளக்கிற் சித் தார்த்தனும்
கல்லி னின்றனன் ; கற்ற கனவியல்
வல்லர் தம்மை வரவழைத் தோதினன் ;
எல்லை யற்றனர் இன்பக் கடற்குளே ! (கஉ)

143. என்ன வானந்தம் ! எங்களுக் கின்றிந்த
மன்னு யிர்க்கும் மகிதலம் யாவிற்கும் !
அன்னை யுன்றன் அணிவயிற் றிற்றவம்
பண்ணு வோனிந்தப் பாருடைத் தெய்வமே ! (கஙு)

144. ஆதி நாதன் அருட்பெருங் காவலன்,
பூத லத்தைப் புனிதமு றச்செய்தே,
கோத றுத்துக் குலவிட நல்லறம்
போத லுற்றனன் புண்ணியத் தேவியே ! (கச)

145. புரையி லாத்தவப் பொற்புடைத் தேவியே!
கரையி லாத களிப்பினை யீந்தனை
வரையி லாத மகிழ்வுறு வல்லவன்
தரையி லுற்றலுக் கிக்குறி சாலுமே. (கரு)

146. எந்தத் தீர்த்தங்க ரர்வரு மெவ்வையும்,
இந்த யித்தகை நற்கன வெய்துமென்
றந்த வுண்மை யவதி யறிவினூற்
சொந்த மாக வரசன் துலங்கினூன். (கசு)

147. மெய்ய றிவு மிளிரும் பெரியவர்
ஐய றிவு மமரு மருகனே
செய்ய சொற் பனக் காட்சியின் சீரினூல்
எய்வ தென்ன வென் றேமுறச் சாற்றுவார். (கஎ)

அகவல்

148. காண்டலாற் பகடுன் கான்முளை பகவன்;
காண்டலாற் காளை காசினிக் காசான் (கஅ)

149. ஆணரி காண்டலால் அனந்த வீரியன் !
காணலால் திருவைக் கடவுளர் தொழுவார். (கக)

150. மந்திர மாலையால் மணம் பெறு தீர்த்தன் !
இந்துவா லெவர்க்கும் இன்பத் தருமனூம் ! (உ௰)

151. காண்டலால் இருள்வலி கதிர்விடுஞ் சோதியன் !
காண்டலால் மீன்கள் கரையிலா சுகியாம். (உக)

152. இருகுடங் காண்டலால் இருநிதி யாளுவான் !
ஸரசியாற் சுந்தரன், தாகந் தணிப்பான். (உஉ)

153. காண்டலாற் கடலே கடையிலா வறிவோன்!
காண்டலால் அரியணை காணுவ னுயர்பதம். (உங)

154. விமானங் காண்டலால் விண்ணின் றிவர்வான் !
பவனங் காண்டலால் பகவன், அவதியோன் *. (உச)

155. அரதனங் காண்டலால் அனந்த குணனே !
எரியினைக் காண்டலால் எரிப்பன் வினையே. (உரு)

---

* அவதி ஞானத்தை யுடையவன்.

வேறு

156. "தவத்தொளிக் கெழிலே ! தூய
தாரணித் தாயே ! பாரிற்
பவத்திருட் படிந்த வற்குப்
பரிவருட் சுரக்கு நாதன்
அவத்தினி லழிவோ ருக்கே
அறவழிகாட்டும் வேந்தன்
உவப்புடன் உன்னுள் உள்ளான்
உனைத்தொழு துய்வோம் யாமே. (உசு)

157. கோமுறைகோடா மன்ன !
குடிகளுக் குயிரே யானாய் !
ஏமுற வுன்ற னன்பே
இணையிலுன் மைந்த னுகச்
சேமுற வுலக மெல்லாஞ்
செய்தது ! வெற்றி வேந்தே
யாமுனைத் தொழுதோம்" என்றே
அகன்றனர் அனைத்துங் கற்றோர். (உஎ)

வேறு

158. பேறினிற் பெரும் பெரும் பேறு பெற்றவள்
ஆறாறு சக்திகள் [3] அளிக்கச் சோதி நாண்,
வீறு சீர், துதி, மதி, வெறுக்கை யாவையும்
ஈறறு களிப்புடன் இலகி வாழ்ந்தனள். (உஅ)

159. பேரின்பக் கனி பிறங்கிடும் பெண்மணிக் கொடிக்கே,
நேரினிற் றிசை மடந்தையர் [4] நிறைபணி புரிந்தார்

---

[3] ஆறுசக்திகள்=ஸ்ரீதேவி, ஹ்ரீதேவி, த்ருதிதேவி, கீர்த்தி தேவி, புத்திதேவி, லக்ஷ்மிதேவி.

[4] திசைமடந்தையர்—திக்கு குமாரிகள்.

பாரில் யாரினும் பாக்கியம் படைத்திடு மன்னே
கோரி டாமலே குணத்தொடு குறிபல பெற்ருள்(உகூ)

வேறு

160. ஒவி யம் முயி ருற்ற வுயர்மணிச்
தேவி தத்துவ வித்தை தெளிந்தனள் ;
தேவரும் பருகத் தெவிட் டாதருங்
காவியம் புனேந்தாள் கலே தேரினுள். (௱௰)

161. மூன் று காலும் மொழிந்தனள் உட்பொருள்,
சான்ற மாதவர் சங்கையும் தீர்த்தனள் ;
நான்கு நற்பயன் நல்குறும் மெய்வழி
ஆன்ற நூல்வழி யார்வுடன் செப்பினுள் ! (௱க)

162. பிறப்பு வேண்டுவர் பேதையர் ! பீடுறுங்
துறப்பு வேண்டுவர் தூயமெய்ச் சோதியர் ;
சிறப்பு பெற்றவர் திண்ணிய நோன்புடன்
பொறி யடைத்த புலவரென் ருேதுவாள். (௱உ)

163. மலமும், நோயும், கவலேயும், மல்கிய
உலகுறுங் துயர் யாவு முணருவாள்.
பல குறும்புகப் பாரின் மருந்துளே
இலகுறும் வகை யெண்ணித் தெளிகுவாள். (௱௩)

164. ஞால வட்டம் நசையிரு ளின்னலிற்
சீலம் விட்டுத் திரிதருந் தீயதீக்
கால வட்டங் கருதிக் கவலுவாள்
மாலு[5] முற்றிடும் வாய்மையு மெண்ணுவாள். (௱௪)

---

5 மால்—அருகக்கடவுள்.

வேறு

165. சிந்தை பொங்கினன்
 சிரத்தையாய்ச் செய்தனன் அறங்கள் !
முந்து மாணவர், தொழிலவர்,
 முறைமுறை முகக்க ;
மைந்தன் வந்திடு மகிழ்வினல்
 மறந்தனன் றனையே,
வந்து மாதவப் பயனெலாம்
 மன்னிய வரசே. (௬௫)

166 தக்க காலத்தி லன்னையின்
 றளிரிள மகட்டிற்
புக்கனன் பல கதிரெனப்
 பொலிந்திடுஞ் சுடரோன் !
மிக்க மாதவம் திங்கள் பத்
 தியற்றினன் வேண்டிப்
பக்குவத் தின ளிவளெனப்
 பாரினிற் றெரிந்தான். (௬௬)

167. முகமு மாகமும் முத்தென மொய்கதி ரொளிரத்
திகழுஞ் செவ்வியுந் தேவருஞ் சேவடி தொழுக,
அகம கிழ்ந்துதன் அன்பினுக் கருங்கலக் கனியின்
தகைநி னைந்தனள் தருமமே பெண்ணுருக்
 கொண்டாள். (௬௭)

168. அகலு நாட்களை யணுவணு வாகவே யன்பிற்
சுகமு கந்தருட் சுடருடன் கழித்தனள் துலங்கி ;
யுகமொர் நாளென வுவகையா லொதுக்கிட முடிவிற்
சகமு கந்திடுஞ் சாந்தநாள் பொலிந்தது புதிதாய்.

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் கனவுகாண்படலம்
முற்றிற்று.

---

# எ. ஜென்ம கல்யாணப்படலம்.

169. கள்ளவிள் வஞ்சக் காட்டிற்
களிவண்டி னினிய பாட்டு
மள்ளரின் மருதப் பாட்டு,
மறையவர் வேத மோடும்
உள்ளுறப் பருகி யன்னம்
உலவிடும் திருவின் மிக்கத்
தெள்ளிய தடத்திற் செய்ய
திலகர னிலகி னானே! (க)

170. புதுவனப் புலக மெல்லாம்
பொலிந்தது! களிது ளக்கப்
புதுவுணர் வுயிர்க ளாவி
புகுந்தது! மனத்தி லெல்லாம்
புதியதோர் சக்தி யூன்றிப்
புந்தியைத் தெளிவித் திந்த
முதுபெரு முலக மெல்லாம்
முத்திநா டாயிற் றன்றே! (உ).

171. ஆதவ னின்று காலை
ஆயிரங் கரங்கள் நீட்டிப்
பூதல மனைத்துந் தெய்வப்
புன்னகை புரிந்தான்! நல்லோர்
ஏதுவி சேட மென்றே
எண்ணியே வியந்தார்! பூவின்
தீதற வருகுந் தேவ
தேவனை யெண்ணி னாரே! (ங)

வேறு

172. தூய நெஞ்சினள், சொல்லினுஞ்
செயலினுந் தூயள்,
வாயி லாகவே வுலகினில்
வருதுமென் றரிய,
தாயெனப்புவி சரண்புகுந்
திரிசலைச் சடலக்
கோயி லிற்றவ மிருந்திடுங்
குணச்கதிர்க் குதலை, (௪)

173. சித்தி ரைமதி பத்துமூன்
ரும்பிறை திகழ,
உத்த ரத்துடன் உறவுசெய்
துதயத்தைத் தூண்ட,
இத்த லம்முழு தின்புற,
இந்திர வுலகும்
பத்தி யோடிசை முழக்கிடப்
பகவனு முதித்தான். (௫)

174. வணங்கி மாமதி வரம்பெறுஞ் சேயினை வாழ்த்திக்
குணக்கதிர் தனைக் கூவிட மறைந்ததுங் குறிப்பாய்
கணித்து நாழிகை களிப்புடன் காசினிக் கோதிப்
பணிந்து நாதனைப் பளிச்செனப் பசுஞ்சுட ரெழுந்
தான். (௬)

வேறு

175. மா சற்றது திசை வானகம்!
மகிழ் வுற் றது வுலகம்!

வீ சுற்றது நறுமா ருதம்!
விம் முற்றது கடலே!
வூ சுற்றது புவியோ டுயர்
உம்பர்க் கிறை யணையும்!
வா சுற்றுபூ மழை பெய்தது
வான் கற்பகம் மலர்ந்தே! (எ)

176. பொங்கித் துதி செய துந்துமி,
பொலி வானகம் முழங்க,
அங் கற்பகம் மணி கிண்ணென,
அழகுச் சுட ருலகம்
சிங்கத் தொனி கர்ச்சி த்திட,
செய பேரி வியந்தம்,
சங்குத் தொனி பவனஞ் செயச்
சாந்தன் புவி வந்தான்! (அ)

177. இணை யற்றதோர் அழ காற்றலுக்
கிலை வேர்வையும், மலமும்,
மண முற்றிடு திரு மேனியும்,
மாசில் வெளுப் புதிரம்,
மணி பெற்றிடு மின்சொல் லொடும்,
வைரத் தனி யுறுதி,
கணியா யிரத் தெண் ணற் குறி
காணக் கதிர் பொலிந்தான். (கூ)

வேறு

178. ஓடினார், மன்னன் பொங்க
ஓதினர், உவகை யாக,
நாடினான் கடவுட் சேயை
நாட்டத்தாற் கண்டான்! நீடு

தேடிய வமர வின்பம்
சேர்ந்தது வென்றான் ! நின்று
பாடினான் தேவ ரோடும்
பசுங்கதிர் மைந்தன் சீரை ! (ய)

வேறு

179. வீரரின் வீர விளக்கொளி யீதோ !
பாரினை வெல்லும் பசுஞ்சுட ரீதோ !
பாரத நாட்டின் பழந்தவ மீதோ !
யாரிதன் சீரை யரைந்திட வல்லார் ! (கக)

180. வானவர் மெய்த்தவர் வாழிக ளார்த்தார் !
தேனுகு பூமழை சிந்தினர் தேவர் !
ஆனனம் பூத்தே யளித்தனன் மன்னன் ;
தானங்க ளெத்தனை தன்முகிற் கையால். (கஉ)

181. மன்னுயி ரின்வறு மைகெட மன்னன்
பொன்மலை யீந்தனன் போந்தவர்க் கெல்லாம் !
தன்னிதி புக்கு தனித்தனி யன்பர்
இன்புறக் கொள்ளுக வெஃதையு மென்றான் ! (கங)

வேறு

182. குறை புரிந்தவர் கோதறு வாழ்வுறுஞ்
சிறை திறந்து சுதந்திரஞ் செய்தனன் ;
நிறைமுவ் வாண்டு நிறுத்த வரிகளைப்
பறைய டிக்கப் பரிந்து புகன்றனன். (கச)

183. ஆடை யூணிற் கருந்தொழி லோங்கவே,
கேட றுங்கலை கீர்த்தியி னோங்கவே,
பீடு நல்லற மோங்கிடப் பேருடன்
நாடு மோங்க நனிப்பொரு ளீந்தனன். (கரு)

184. சங்கங்கள், தவச் சாலை, வனங்களும்,
துங்க மான மடங்கள் துலங்கிட,
பொங்கக் கல்விப் புலவர் தழைத்திட,
சங்கை யற்ற தருமம் புரிந்தனன்! (கசு)

185. கைத் தொழில்கள் கணக்கறுந் தோங்கிட,
பொய்த் தொழில்கள் மிடியுடன் பொன்றிட,
மெய்த் தொழில்கள் மனைதொறும் மேவிட
மைத் தொழில்கள் மறைந்திட வீந்தனன். (கஎ)

வேறு

186. நாளொடுங் கோணல மெண்ணினர் நல்லோர்,
வேளொடு மாலென விண்டனர், பூவை
யாளு மரக்கவ லியறச் சாந்தம்
வாழுறச் செய்திடும் மன்னவ னென்றார். (கஅ)

187. சித்தரி னங்கத் திருவொடும் போந்த
உத்தம மைந்தன் உலகினை யாளும்;
சுத்தம் சுதந்த்ரம் சமத்வந் துலங்க,
எத்திசை யும்மிசை யேற்பனென் றாரே! (கசு)

188. உலகி லெத்தனை யுத்தம ருற்றனர்,
அலகி லத்தனை பேரி னழகுமே,
இலக னுற்றனன். இப்புவி காக்கவே,
நிலவ னுற்ற நிமல னிவனென்றார். (உ0)

189. ஏமுற் ருரிதைக் கேட்டனர், ஏத்தினர் !
தோமற் ரேமினித் தொல் பெறு நல்லறம்
சேமுற் ரேற்ற மடைந்திச் செகமெலாம்
நேமுற் ரேகும் நெடுங்கதி யென்றனன். (உக)

வேறு

190. இன்ன தோர் மங்கல மிங்கி ருந்திட,
மின்னெளி யருகனே மேரு மீமிசை,
துன்னிய வரியணை துலங்கப் போற்றிடப்
பொன்னகர்ப் புரந்திரன் பொலிய வந்தவன். (உஉ)

191. மாயையா லிங்கிணை மகவை விட்டனன்.
நாயகன் றனைத்திருச் சென்ம நன்மணம்
தாய்வுறப் புரிந்திடச் சுரர் சுமந்திட,
மேயினன் கரியினில் மேரு மீமிசை. (உங)

வேறு

192. அரதன வரியணை யமைத்து, மீமிசை,
வரதனை யேத்தினர் வாழ்த்தொ லித்தனர் !
அரிதிரைப் பாற்கடல் அம்பி ளுட்டினர் !
கரியினில் நடத்தினர் கடவுள் மைந்தனை ! (உச)

வேறு

193. ஆட்டிய வம்பு ராசி,
யத்தனை தனையும் சேயே
வாட்டமற் றுறுதி யோடும்
பொறுத்ததால் வியந்து வானோர்

சூட்டினார் வீரசாமி
 எனச்சுடர் துலங்கும் பேரைப்
பூட்டினார் கதிரை வெல்லும்
 பூண்முடி மணிக ளம்மா ! (உரு)

194. பன்மணிப் பூண்க ளோடும்,
 பளிச்சிடு மழகன் நெஞ்சில்
துன்னிய வீரம் பச்சை
 முகத்தினில் துளிர்த்த தம்மா !
மின்னொளித் தேவர் பற்பல்
 விதங்களிற் சிறப்பு செய்தே
யண்ணலை மீண்டுஞ் சொந்த
 அணிமனை விடுத்திட் டாரே ! (உசு)

195. சுரர்கணத் தோடு வேந்தன்,
 சொல்லிய புகழைக் கேட்டுத்
திருக்கரத் தாலே சேயைச்
 சேர்த்தினன் மார்ப கத்தில் !
அருக்கனே ! அயனே ! மாலே !
 ஆதியே, அத்தனே ! என்
றுருக்கிட வன்பு நெஞ்சை
 உச்சியை முகந்திட் டானே ! (உஎ)

196. திண்ணய கணிக ளந்தத்
 தெய்வமாச் சேயின் நாளைப்
பொன்னிற் றீட்டி யாங்கு
 பொலிவுறும் பலனைக் கண்டே
மண்ணினு மிணையி லாதான் ;
 வானினு மிணையி லாதான் ;

தன்னிலொப் புயர்வி லாதான்
சாந்தனே தீர்த்த னென்றார். (உ அ)

வேறு.

197. செய்ய தேவர் திருவடி சேவித்தார், !
துய்ய மாதவர் தோன்றிலைப் போற்றினர் !
கையெ டுத்துக் கழல்விழுந் தேத்தினர் !
ஐயன் புன்னகை யாரையும் வென்றதே ! (உகூ)

வேறு.

198. விசயன் சஞ்சயன் எனுமிரு சாரணர் விரைந்தார்
வசையி லையனைக் கண்டதும், மன துள வையம்
விசையில் நீங்கினர் வியந்தனர் ! சன்மதி யென்றே
இசையுடன் திருப் பெயரினை யீந்துமே தொழுதார் ! (ஙo)

199. கேட்ட மாந்தர் கிளர்ந்து மகிழ்ந்தனர்,
வாட்ட மற்று வனப்பு சிறந்தனர் ;
நாட்டின் பாக்கியம், நம்முடை மெய்த்தவ
மீட்ட நற்பய னென்று விளம்பினர். (ஙக)

200. செல்வமுந் திருவுஞ் சீருஞ்
சிறப்பிவன் வந்த வன்றே
மல்கிய மாண்மை யாலே
வர்த்தமானன் எனும்பேர்
நல்கினர் பெற்றோர் மற்றோர் ;
நாதனும் நாளு மாங்கே
பல்கிய வினிமை யோடும்
பரிதிபோல் வளர்ந்திட் டானே. (ஙஉ)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் ஜென்ம கல்யாணப் படலம்
முற்றிற்று.

# அ. மஹாவீரப் படலம்.

201. பொன்னைக் கொடு மேனி பொலிந் ததுவோ!
மின்னைக் கொடு மூரல் மிளிர்ந் ததுவோ!
கன்னற் கொடு சொற்கள் கவர்ந் தனவோ!
என்னற் சொல வெண்ணுவ னிவ் வழகை! (க)

வேறு

202. தேனும் பாலொடு சீனியும் பருப்பெலாஞ் சேர்த்தே
வானும் போற்றிடு மமுதினு மமுதமாய் வழங்கி,
கானத் தென்றலில் வெண்ணிலாக் களித்திடக் காதற்
பானஞ் செய்யினும் பகவ வுன் பார்வையி
னினிதோ! (உ)

வேறு

203. கண்ணன், கட்டழ கன், கன க்ச்சுடர்
வண்ணன், மாமணிச் சோதி மழலையின்
பண்ணன்; பார்த்தவர் பாக்கிய முற்றதென்
றெண்ண நாளு மினிது வளர்ந்தனன். (ங)

204. எண்ண மெல்லா மிவன்மய மாகிடக்
கண்ணுண்டான் அன்பர் காதலை யுண்டனன்
புண்ணியச் சுடரைப் பொருந் தாதநாள்
விண்ணவர் வெறு நாளென விண்டனர். (ச)

205. அழகு சொட்டு மமுத விளஞ்செல்வன்
அழகு சேர்த்தனன் அண்டிய வன்பர்க்கே.
தொழுகுங் கைகள் தொகையற்ற வே! தினம்
பழகும் பண்பர் பலபல கோடியே! (ரு)

206. கேள்வ ! கண்ணா ! கிளர்மணிச் சோதியே !
வேள் பழித்தவ மெய்ய வுன் மென்மலர்
தாள்தொடத் தவஞ் செய்தனம் யாமென
வாள் பழித்த விழியர் மருவுவார். (சு)

வேறு

207. காதற் கிளியே ! கடவுட் பெரியோய் ! கனிவாயே
போதக் கனியே ! பொலிபொற் றிருவே புவி
யெல்லாம்,
ஓதற் குரியாய் ! உயர்கே வலியே ! உரு கன்பர்
சோதிக் கதியே ! சுத்தச் சுடரே ! சர ணென்பார் !
(எ)

வேறு

208. சாந்தன் வாழிய ! தரணி வாழிய !
மாந்தர் வாழிய ! மன்னறம் வாழிய !
வேந்தன் வாழிய ! மெய்த்தவம் வாழிய !
காந்தன் வாழிய ! காதலன் வாழ்கவே ! (அ)

வேறு

209. பொன்னிற வானிற் பொலிகதிர் போன்றே
மின்னிடைச் செல்வியின் மென்கர மேந்தி
என்னுடை யின்ப னென் றிவ்வுல கென்றுந்
தன்னுடை நெஞ்சிற் றழைத்திடுஞ் சாந்தன், (கூ)

வேறு

210. அழகு சொட்டி யழகு நிறைத்தனன்.
அழகு வாணகை யாண்டனன் ஆதியே !
அழகி ளங்கையர் அம்புலி காட்டியே,
அழகு தேன் மொழி யோடு மழைத்தனர் ! (ம)

வேறு

211. மின்னெனத் தாவினான் ! மீனெனத் துள்ளினான் !
அன்னமென் றார்ந்தனன் ! ஆவிளங் கன்றுபோல்
இன்னியன் ஹேடினான் ! ஏர்வுடன் நின்றனன் !
கன்னலென் றம் மொழிக் காதலை யூட்டினான் (கக)

212. வீரனே நின்றனன் ! வீரனே யோடினான் !
வீரனே பேசினன் ! வீரனே யாடினான் !
வீரனே நட்டனன் ! வீரமே வீசினன்
வீரமே யூக்கினான் வீரமெய்க் காதலன். (கஉ)

213. ஓடுவான் பாலரோ டோர் விழா வாற்றுவான் ;
ஆடுவான் ஆலயத் தேருபோ லாக்குவான் ;
கூடுவான், பாடுவான், கொட்டுவான், ஊதுவான்,
பீடுறும் மாடலே பேசிடும் பிள்ளையை. (கங)

214. பூமியை நீவுவான் ; பூங்குடிற் கட்டுவான் ;
சாமியை வைத்துளே தன்மயம் மெண்ணுவான் ;
நேமியைப் போலவே நேயரை யாளுவான்
சேமமே சேர்ந்திடும் சேர்ந்திடுந் தோழர்பால் ! (கச)

215. திக்கெலாஞ் சுற்றுவான் ! தீண்டியோ ரின்பமாய் ;
எக்குலத் தாரொடும் இன்பமாய்ப் பேசுவான் !
முக்குடைச் சாமியே முப்பெருஞ் ஞானி[1] யே,
முக்குணப் பாரினை, மும்மையும் மோர்ந்தனன்! (கரு)

---

1 மதி ஞானம், சுருதி ஞானம், அவதி ஞானம் ஆகிய மூன்று ஞானங்களை யுடையவன்.

216. கண்களும் மின்புறுங் காதுகள் ளின்புறும்
வெண்ணெய்போல்மேனியை வேண்டியே தீண்டியே
பண்ணுடன் முத்தமிட் டேகுவார் பாரினில்
விண்ணகத் தின்பமே விண்டனர் மாந்தரே ! (கசு)

217. காரினிற் பைம்பயிர்க் காட்சிபோல் ஏமமாம்,
ஏரிளங் கன்றினை யெண்ணமா யன்புடன்
பாரினில் யார்கொலோ பார்த்தகம் பூத்திடார் !
நேரினிற் கண்டவர் நெஞ்சினிற் கண்டனர். (கஎ)

218. பாருடைச் செல்வமே ! பச்சிளம் மின்பமே !
சீருடைச் சாந்தனே ! தேவனே ! வீரனே !
யாருடை மெய்த்தவத் தாசியால் எங்குலப்
பேரினைக் காத்தனை என்றனர் பெற்றவர். (கஅ)

வேறு

219. அதிசயப் பிள்ளை பெற்ற
அருந்தவத் தன்னை தன்னை
நிதந்துதித் திரேசத்[2] தீவின்
நின்மலக் குமரி மார்கள்
இதமுடன் பணிகள் செய்தார்.
இன்பமு மன்பு மெய்தி
சுதிமதி யவதி ஞானச்
சுடரினைத் தொழுதார் மாதோ ! (ககூ)

220. அறிவெலா மமைந்து வந்தான்
யார்கொலோ விவனுக் கோதும்
அறிவினர் என்றே தேர்ந்த
அறிவினர் வணங்கிப் போந்தார் ;

---

2 திரேசத்தீவிலுள்ள ஐம்பத்தாறு தெய்வப்பெண்கள்.

செறிவுறுங் கலைகள் யாவுஞ்
சேர்ந்தன விவனை ; நீதி
நெறிகளு மிவனு லன்றோ
நிலைத்தன உருவாய் மாதோ ! (உ0)

வேறு

221. பன்மத வேதமும், பகவற் காதையும்
தொன்மற வீரரின் றாய சீர்மையும்,
கன்மன முருகிடுங் கவியின் வெள்ளமும்,
தன்மனம் பழுத்திடுந் தவமுந் தேர்ந்தனன். (உக)

வேறு

222. நிறை தவத்தினன் நீணில மாந்தரின்
குறை தவிர்க்கக் குணநிதி யாகினுன்.
இறைவ னுகிட, வின்பமு மாகிட
திறமை யூன்றித் தினம்பயின் ருன்கொலோ ! (உஉ)

223 தந்தை தாயர் தனிப்பெருந் தூயவர்,
சிந்தை பூண்டனர் சேயின் சிறப்பெலாம்
எந்த வெக்குறை யின்றி யிலகிட
அந்த மாக வறத்திற் பழக்கினர். (உ௩)

224. பெற்ற ஞானம் பிறங்கிட வாழ்வினில்
முற்று நின்ற முதல்வனெண் ணுண்டினில்,
உற்ற தோழர் உருகிட வாடியே,
நிற்றனன் ஒரு சோலையி னீழலில். (உச)

225. மலை வனத்தின் வனப்புறு காட்சியில்
இளைய நண்பர்கள் எய்தினர் இன்பமே.
கிளைக ளேறினர் ! கீழ்குதித் தோடினர் !
வலிய வீரனின் வல்லமைக் காற்றிலார் ! (உரு)

வேறு.

226. இவ்வணம் மறந்தே தம்மை
இளையவர் ஆடு மெல்லை,
அவ்வட மரத்தைச் சுற்றி,
யாதுகொல்! வலிய நாகம்!
வெவ்விய கனலு குத்தே
விரிபணை விடத்தைக் கக்கித்
தவ்வியே சீறி யாடித்
தருக்குடன் நிமிர்ந்த தம்மா! (உசு)

227. அரவர வென்றார்! ஓடி
யரற்றினர் அஞ்சிப் பாலர்!
வரவர வீரன் பாலே
வந்தது வலிய பாம்பே!
சரசர வென்ன வந்தான்!
தாளினால் மிதித்தான் சாந்தன்
பரபர வெனமீ தேறிப்
பணைமுடி யாடி னானே! (உஎ)

228. வியந்தனர் தோழர் கண்டே!
விழிகளை நம்பார்! வீரன்
பயந்தெளி வித்தான்! அச்சம்
பறந்தது! பாம்பு மாங்கே
தயங்கியே தாழ்ந்து வீழ்ந்தே
தருக்கெனத் தேவ னாகி
வயங்கியே "நீமா வீரன்"
என்னவே வணங்கிச் சொல்லும் :— (உஅ)

229. பிரியகா ருணியின் செல்வப்
பிள்ளையே ! விண்ணும் பூவும்
பொருவரு வீரன் நீயே !
யென்றுனைப் புகழ்ந்தான் வாசன்
தெரிதரத் தகுதி யிந்தப்
பணியுருச் செறிந்து வந்தேன்.
சரண்புக்கேன் ! தேவ ! யானே
சங்கமன் எனப்பேர் வாய்ந்தேன் ! (உகூ)

வேறு

பராக்கிரம ஸ்தோத்திரம்.

230. ஈராறும் அங்கத்தை ஈவாய் நீயே !
எண்குணமும் பொருந்திடுவாய் ! இறைவ நீயே !
சூராதி சூரர்க்குஞ் சூர நீயே !
சுதியாதி யுட்பொருளும் பயனும் நீயே !
பாராதி பாரினிலும் பகவன் நீயே !
பவம்நான்கும் படிகடந்த சித்தன் நீயே !
வீராதி வீரமஹா வீரன் நீயே !
விண்ணாதி விண்ணிலும் கடவுள் நீயே ! (௩0)

231. அனைத்தினையு மறிந்துதித்த அறிவன் நீயே !
அறுபொருளு நவபதமும் அறிந்தோய் நீயே !
வினைத்திரையை விடுத்துதித்த வேந்தன் நீயே !
விளங்கிடுமு வரதனங்கள் விண்டாய் நீயே !
தனையொவ்வாத் திருவுடைய சாது நீயே !
சாந்தனே ! அருகனே ! சாதரூபீ !
மனைமாய விருளற்ற வரனும் நீயே !
மஹாவீர பகவனெனும் மாண்பு நீயே ! (௩க)

வேறு.

232. கருணையங் கடலே யுன்றன்
கழலிணை முடிமேல் வைத்தற்
கருளின்று கூடிற் றென்றன்
களிப்பினை யளக்கப் போமோ!
முருகிய தவத்தின் செய்ய
முறைகளை நிறை வகுத்தோய்
உருகிட வுன்னை யென்னுள்
உடலெல்லாம் உள்ளங் தாராய்! (௩௨)

வேறு.

233. வந்த னத்தோ டன்பு பூத்த
வாச நெஞ்ச மாமரை
தந்த னைத்து முன்னடிச்
சரண் புகுந்து நின்றனன்!
சிந்தை சுத்த மாகினேன்
சினேந்த்ர வர்த்த மானனே!
நைந்த வென் வினைகளே!
நலிந்த வென் நவைகளே! (௩௩)

234. சித்த வாழ்க! செல்வ வாழ்க!
சின வாழ்க மோனனே!
முத்த வாழ்க! மூர்த்தியாம்
முதல்வ வாழ்க! வாமனே!
அத்த வாழ்க! வீரனே
அருக வாழ்க! நித்தனே!
சுத்த வாழ்க! சாமி வாழ்க!
சோதி நாத வாழியே! (௩௪)

235. என்றினும் பலவா றேத்தி
யிறைஞ்சிச் சங்கமனுஞ் சென்றான்.
வன்றிறல் வர்த்த மான
வாலிப னொருநாள் சீறி
நின்றதோர் மதமதப் பேர்
நிலவுமோர் மத கயத்தைத்
தன்றிருக் கரத்தாற் பற்றித்
தானதன் மீது சென்றான்! (௩௫)

236. ஆசையின் மதம டைத்தோன்
யானையின் மதம ழித்தான்.
ஈசனென் றறிந்த யானை
யிவனடி பணிந்தே யன்புத்
தாசனாய்த் தாழ்ந்த தின்ன
சாலமாச் செயல்க ளோடும்
பூசனை புரியத் தேவர்
பொலிந்தனன் புனித வாழ்வில். (௩௬)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் மஹாவீரப் படலம்
முற்றிற்று.

## கூ. இரங்கற் படலம்.

237. கற்பகத் தரசனுங் கழல்ப ணிந்திடும்
நற்குண நிதிபனும் நாளுஞ் செவ்வியும்
அற்புத சக்தியுற் றேங்கு மவ்வையின்
முற்பிறப் பறிந்ததன் முறை யியம்புவாம்! (க)

238. நன்மையே நிறைந்தனன், நசையும் தீமையாம்
புன்மைக ளற்றனன் புரைக ளற்றனன்,
அன்பினில் முற்றினன், அருளின் வாரியே
என்பினி லுருகினன் இன்னு யிர்கட்கே! (உ)

239. காட்சியும் ஞானமும் ஒழுக்கங் காத்திடும்
மாட்சியும் விரதமும் வன்ற வப்பெருந்
தேர்ச்சியும் [1] குப்தியும் தேர்ந்த தூயனும்
ஆட்சியை வெறுத்தனன் அகத்தை நோக்கினான். (ங)

240. வயதுற வயதுற வருகு ஞானத்தால்,
மயலுறு முலகினில் மன்னு யிர்களின்
துயரமே மிகமிகத் தோன்றத் தன்னுடைத்
துயரென அவற்றினைத் துன்னி நொந்தனன். (ச)

வேறு.

241. கனக மாளிகைக் காவலுஞ் செல்வமும்,
மினு மினுக்கிடும் மின்னொளி மாதரும்,
இனிய கீதமும் ஆட லிவையெல்லாம்,
மனதி மூத்திடும் மாயமென் றோர்ந்தனன். (ரு)

---

1 குப்தி—அடக்கம்; மனோகுப்தி, வாக்கு குப்தி, காய குப்தி என மூன்று விதமாகும்.

242. பருவ மங்கையர், பாங்கியர், சேவகர்,
மருவு சீர்த்தி யரசுடை மாண்பதின்
மரும முற்று மறிந்தவ ருக்கெல்லாம்
கரும பந்த மிவையெனக் காணுவான். (சு)

243. அன்று காணும் அரியணைச் சீரெல்லாம்
தொன்று தொட்ட கருமத் தொடுப்பெலாம்
இன்று தோன்றிடும், நாளை யிறந்திடும்,
என்றனன் னிதயத்திற் றந்தனன். (எ)

244. மாதர், பொன்னும், மணியும், மகுடமும்,
காதல் ஆடலுங் கானமு மென்றிவை
கோது றுத்திக் குலைத்திடும் வாழ்வினைக்
காதி கர்மங்க [2] சேளயெனக் கண்டனன். (அ)

245. இறந்தி றந்திடும் பைக்கடல் மூழ்கியே
பிறந்த லையும் பிறப்பினை யென்றுமே
துறந்த வர்க்கே சுகமென் றுணர்ந்தனன்;
மறந்து மெண்ணிலன் மட்சுகந் தன்னையே! (கூ)

246. பளிங்கு மாடமும் பாவையர் மின்னலும்,
உளங்க வரும் உயர்பழச் சோலையும்,
விளங்கு வேந்தன் விரிந்த திருவெல்லாம்,
களங்க மென்று கருத்தினில் நீத்தனன். (ல)

---

2 காதி கர்மங்கள் நான்கு; அவை ஞானவரணீயம், தரிசனுவரணீயம், மோகநீயம், அந்தராயம் என்பனவாம். அவை முறையே ஆத்மாவினுடைய சுபாவ குணங்களாகிற ஞானத்தையும், தரிசனத்தையும், சுகத்தையும், சக்தியையும் தடுக்கின்றன.

வேறு.

247 அருந்தவப் பயனாய் வந்த
வழகனிவ் வுலகி னேடும்
பொருந்திடா மனத்த னென்னைப்
பொட்டென வறிந்தே தந்தை
விருந்தொடுங் காத லோடும்
வியன்பெருஞ் செல்வத் தோடும்
இருந்ததோர் கனக வீட்டில்
இருத்தினன் இச்சை மாற. (கசு)

248. உலகுடைத் துயரும் சாவும்
உள்ளத்தி லெண்ணி யெண்ணி
யலமுறு மைந்த னுக்கே
யவ்வகை யெண்ணம் போக்கப்
புலன்களை யிழுக்க நாளும்
புதுப்புதுச் சூட்சி செய்தான்
உள்ளன்கொலோ வலிமை மாயன்
உறுதியி னுளத்தை யேய்க்க! (கஉ)

வேறு.

249. பஞ்சிமென் றுளிறடிப் பாவை மார்களே
அஞ்சிலம் போசையே வரற்ற வண்டியே,
கொஞ்சுவர், ஆடுவார், குயிலிற் பாடுவார்;
வஞ்சமென் றிவையெல்லாம் வாய் திறந்திடான்!
(கங)

வேறு.

250. தந்தை தாய்க்கடன் சாலவுஞ் செய்குவான்,
சொந்த மாகச் சுதியுடன் பாடுவான்;
பந்த மான படர்ப்பினை நெஞ்சினில்
எந்த வாறு மிருந்திட வாற்றிலான். (கச)

251. வன்னி நல்லறந் தன்னை வடுவறத்
தன்னி கரின்றிச் சாலவுங் காத்தனன்.
பன்னு பன்னிரண் டாகும் [3] பதுமைகள்,
உண்மையான வுறுதியிற் காத்தனன். (கரு)

252. சுத்த முற்றுத்தன் வாழ்வினில் தொல்புவி
மெத்தவும் வருந்தும் வினை தீர்த்திட,
எத்தகை வழி யென்று நினைந்துமே,
சித்த முற்றிலுஞ் சிந்தனை யாகுவான். (கசு)

வேறு

253. மிடியிருள் மூழ்கித் தீமை மேவிய வுலகிற் கென்று
விடிபொழு துறுமோ? பந்த விடுதலை யாவ தென்றோ?
துடிக்குதென் னுவியென்றே தொல்லுலகல்லலெண்ணி
வடித்தருட்கண்ணினீரைமனத்தினில் இரங்குவானே!

254. இந்த நாள் உலகுயிர்கள்இன்னலுற்றின்னல்செய்தே,
விந்தையாய் மாயை வாயில் வீழ்ந்திடும்; வினைகளற்றே
எந்தவெந் நலிவு மின்றி இன்பமா யருளில் வாழும்
அந்தநாள் வருகு மாற்றை ஆழ்ந்துளே எண்ணினு
னே!

255. இப்படி வருந்து முள்ளந்
தன்னையே யின்னும் பெற்றோர்
எப்படி யுலகின் பாலே
யிழுப்பமென் றெண்ணி யெண்ணி
சொப்படி வித்தைப் பூவைத்
துணிந்தறிந் திருந்தோனுக்கே
செப்பிட வொண்ணுச் சீரின்
செல்வியை முடிப்போமென்றூர். (கஎ)

---

3 சிராவகர்கள் அனுஷ்டிக்கவேண்டிய பன்னிரண்டு விரதங்கள்.

256. அரசனின் தங்கை யான
அசோதியை கலிங்க மன்னன்
மருவிய மின்கொ டிக்குப்
பழுத்தநன் மகளே யான
பொருவரு பொற்பின் மிக்க
பொன்னெளிர் யசோதை தன்னை
மருமணம் முடிக்க வேண்டி
மனத்துப்பால் குடித்தார் மாதோ ! (உ-ㅇ)

257. மின்னிடை வல்லி யாவாள்,
மென்மொழிக் குயிலே யாவள்;
பொன்னுடைத் திருவே யாவள்;
புதுமண வின்பந் துய்ப்போர்
கன்னலுந் தேனு மாவாள்
கட்டழ கரசி, செங்கால்
அன்னமும் மயிலும் நாண
அணிநடைச் சாயலுள்ளாள்! (உக)

வேறு

258. அருள்விழியும், மலர்முகமும், அகன்றமார்பும்,
அன்பொழுகும் இன்சொல்லும், அறிவுமுண்மைப்
பொருள்பொதிந்த சாந்தமொடும் பொன்னூர் மேனி
பூத்திலகும் புதுவண்ண வனப்பும், நீண்ட
திருவுருவும், திருநடையும், திருவின் வாழ்வும்,
தெய்வீகத் தவப் பொலிவும் கண்டெம் மாதே
உருகிமனம் இவனெய்தேல் உயிர்க்கே னென்றே
உறுதியுடன் காதல்கொளா வுமை யாவாள் !

259. காதலே கொண்டாள் மிக்கக்
கற்புடன் யசோதை யேனும்,

மாதரை எந்தவாறும்
மனத்திலும் புணரா வன்னி
நாதனும் "விண்முயற்சி
நாடினீர் நடப்பீர் பின்"னென்
றோதினன் இளமை நெஞ்சை
உள்ளிழுத் தொடுக்கி வென்றான். (உ௩)

260. மணப்பறை யிங்கடித்து
மங்கலம் மகிழ்வார்; நாளை
பிணப்பறை யங்கடித்தே
பெருங்குர லழுது நோவார்;
நிணப்பறை, வெறுமை வாழ்வே
நீத்திடல் இன்ப மென்றே
மனப்பறை யடித்து ரைக்கும்
வாய்மையை அறிந்தி லாரே. (உ௪)

261. இவ்வகை யெண்ணித் தாய்க்கே
யியம்புவான் "அன்னாய்! பூவில்
உய்வகை வேண்டின், என்றன்
உள்ளத்திற் பற்று நீத்தே
செய்வகைத் தவ முயன்றே
சேமமுற் றுலகிற் கின்பம்
எய்வகை யீவ தொன்றே
யிதற்குயான் உதித்தேன்" என்றான்![4] (உ௫)

262. மன்றலை முயன்ற பெற்றோர்
மதியினைத் தொட முயன்ற

---

4 பகவான் மகாவீரர் யசோதையை மணந்து ஒரு பெண் குழந்தையையும் பெற்றதாக சுவேதாம்பரிகள் நம்பு கின்றனர்.

தெண்டிரை யெனவே தோற்றுச்
சிந்தையைச் சுருக்கினார்கள்.
மண்டுறு வினைக்கு மேலும்
மனத்திலும் இடந்தராமல்
நின்றுறுந் தூய வாழ்வை
நினைத்தறிந் தடங்கி நின்றார். (உசு)

263. பூரணத் தூய்மை யெய்தி,
புரை கடந் துலகி னுக்கோர்
ஆரணி யருக ளுக
ஐம்பெரு மறிவி னோடும்,
சீரணிந் திலக வெண்ணித்
திருந்திடும் வாழ்விலந்தப்
போரணி மனையின் மாசு
பொருந்துதற் கிடமு முண்டோ. (உஎ)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் இரங்கற்படலம்
முற்றிற்று.

---

# ௰. முற்பவப்படலம்.

264 கள்ளவிள் கனகப் பூக்கள்
கண்ணென நோக்கி நிற்க,
உள்ளுற வின்ப மல்கி
யுதித்து மேசிவந்து, நெஞ்சை
யள்ளுரு மழக னுக்கே
யடிமலர் பணிந்து நிற்கும்
தெள்ளுநீர்ச் சோலை தன்னில்
சீனனும்[1] விளங்கி னானே ! (௧)

265. இத்திரு வெழிலிற் பொங்கி,
இமயவ ருலக மாந்தர்
அத்ததி யருகு வந்தே
அடியிணை வணங்கி யாழில்
முத்தமி ழனைய கீதம்
முறைமுறை மீட்டி யின்பந்
தத்தியே வீரன் நெஞ்சில்
தவழ்ந்திட விடுத்தா ரம்மா ! (௨)

வேறு

266. நறவு பெற்ற நலம்பெறு கீதமும்
அறிவு முற்றிய வையனுட் பாய்ந்தும்
உறவு செய்துயர் புந்தியில் ஒன்ற, முற்
பிறவி யெல்லாம் பிறந்துமுன் நின்றவே ! (௩)

---

1 ஜினன் என்னும் சொல் சினன் என்று மாறி, இசையின் பம் நோக்கி சீனனென்றாயிற்று.

267. இப்பி றப்பி லிறையவ ளுகிட
முற்பி றப்புகள் என்ன முயன்றனன்,
அப்பி றப்புகள் ஐயன்முன் நின்றதைச்
சொற்சு ருக்கித் துலக்குவன் கேண்மினோ. (சு)

வேறு

268. உருகு கீதத்தால் உள்ளொளி விளங்கிய விமலன்,
கருமப் பற்றினல் முப்பது பிறப்புகள் கண்டே,
அருக னுகியின் றடைந்ததோர் அருட் பெரு நிலை
[யைத்
தெரியக் கண்டனன் ; தெளிந்தனன்உயிருடைச்
சிறப்பே

முற்பவங்கள்.

269. பூர்வ விதேகக் காட்டிற்
புரூரவ னென்னும் வேடன்
சீருயர் சகர சேன
முனியுரை சிரமேற் கொண்டு
தேரியே, தேனு மூன்விட்
டேகிச் சுதர்மகல்பம் [2]
ஓர்கடற் காலந் தேவாய்
ஒளிர்ந்தனன் உயர்ந்த வாழ்வில். (சா)

270. அங்கிருந் தவனி மீதே
அயோத்தியிற் பரதன் சேயாய் [3]
நன்குற்றான்; துறவியானுன்;
நழுவியே சமயநீதி

2 சுதர்ம கல்பம்-சௌதர்ம கல்பம்-பதினறு கல்ப லோகங்களில் முதலாவது.

3 பரதேஸ்வர சக்ரவர்த்தியின் குமாரனை மரீசியாய்.

தங்குற்ருன் பிரம கற்பம் [4]
பதின்கடற் காலம்; தான்பின்
இங்குற்ருன் சடில மையன்
என்னுமந் தணனுய் மாதோ ! (எ)

271. இருகடற் காலம் பின்பே
யிருந்தனன் சௌ தர்மத்தில்
பரத்துவா ஜன்சே யாய்ப்பேர்
புஷ்பமித்திரனுய்ப் பாரில்
பெரும் அட யோகஞ் செய்தே
பெற்றுசௌ தர்ம கற்பம்
ஒருகடற் கால மின்புற்
றுதித்தனன் சேதிகத்தில். (அ)

272. அக்கினி பூதியோடுங் கோதமிக் காங்கு தித்தே
அக்கினி சாக னென்ற அந்தணனுகி, நீத்தான்.
புக்கவன் ஸனத்குமாரம் [5] பொலிந்தெழு கடலின்
[காலம்,
அக்கினிமித்திர னென்னும் அந்தண னுனுன்மாதோ !

273. கோதமன் கோசி கை தங் குலக் கொடியாகிப்பின்பு
மாதவத் தாலே பெற்ருன் மஹேந்திரகல்பம் [6] பின்பு
தீதறத் துறந்த பாரத் வாஜனுய்த் திகழ்ந்து முன்
[போல்
மீதும ஹேந்தி ரத்தில் மேவியேழ் கடற்கால் வாழ்ந்
[தான்,

---

4 ஐந்தாவது கல்பலோகம்.

5 மூன்ருவது கல்பலோகம்

6 நான்காவது கல்பலோகம்

274. அரிவையர் மோகத் தாலே, யாங்கவ னிறந்து வீழ்ந்
[தே,
ஒருபுல வுயிராய்ப் பின்பே உயர்ந்து மஹேந்திர
[கல்பம்.
அரசமா நகரந் தன்னில் ஆண்டதோர் விஸ்வபூதிக்
கரியதோர் மைந்தனுகி யமர்ந்தன னங்கு மாதோ !

வேறு

275. விசுவ நந்த னெனும் பெயர் மேவினன்;
விசுவபூதி துறந்தனன், மேதினி
விசக பூதி யிடம் விடுத் தான்; அவன்
விசக நந்தியாம் மைந்தனை மேவினன். (கஉ)

276. வெஞ்ச மரினில் விஸ்வன் விசாகனை
தஞ்ச மாக்கின னேனுந் தரணியை
வஞ்ச மென்று துறந்து மகேந்திரம்
துஞ்சினன் பதினறு தொகைக்கடல். (கங)

277. தகைபெறும் பயாபதிக்கும்
மிருகைக்கும் மைந்தனுகி,
புகுந்தனன் திவிட்டன்.[7] பேரால்
போதன புரத்தி லாங்கு
மிகுசமர் பலவும் வென்ருன் ;
மேதகு செல்வ னேனும்
உகந்தனன் ஊனும் இன்ன ;
உருண்டனன் நரகத்திற்கே ! (கச)

---

[7] தோலா மொழித்தேவரியற்றிய சூளாமணி யென்னும் அழகிய காவியத்தின் கதா நாயகன் இந்தத் திவிட்டனேயாம்.

278. சேர்ந்தனன் பிரவிபூலச்
சீயமா யுலகில், மீண்டும்
வீழ்ந்தனன் நரகம்; பின்பு
மேவினன் சீயமாகச்
சார்ந்தனன் வராசக் குன்றம் ;
ஆவொன்றைத் தசை யுணற்கே
பேர்ந்திடும் போதி ரண்டு
பெரியவர் தோன்றி னரே ! (கரு)

279. ஐயநீ யருக னாக
அவதரித் திடவே தக்கோய் !
வெய்யவூ னருந்த லாலே
விலங்குட லெடுத்தாய் ! இன்றிப்
பொய்யுண வகன்று, சாந்தப்
புனிதிமாய் வாழா யென்னத்
துய்யரின் நெறியைப் பற்றி
சுதர்மகற் பத்தைச் சேர்ந்தான். (கசு)

280. கனகுபன் மைந்தனன கனகசுவ லனாய் வந்தே
இனியதோர் போக மூழ்கி ஏமமா புரத்தை யாண்
[டான்.
முனிவரன் பிரியமித்ரன் மூதுரை மருந்தி னாலே
ஜினவிர தத்தில் வாழந்தே லாந்தவ கற்ப [8] ஞ் சேர்ந்
[தான்.

281. வச்சிர சேன னுக்கு வாய்ந்தரி சேன னாக
உச்சினி தன்னில் ஆண்டான்; உத்தம விரதம் போற்றி
மெச்சிடச் சுப்ர திட்ட மெய்த்தவன் சீடனாகி
வைச்சனன் சுக்ர கல்பம் [9] வானவ னாக மாதோ !

8 ஏழாவது கல்பலோகம்

9 ஒன்பதாவது கல்பலோகம்

282. மீண்டுமே சேம தாதி, பிரியமித் திரனாய் மேவி
ஆண்டனன் அறத்தைப் போற்றி யருகனை வணங்கி [நாளும்;
ஆண்டைத்தீர்த் தங்க ரர்தன் திருச்சபை யடைந்து [ஞானம்
வேண்டிய தேற்று முற்றி ரூசக விமானியானன் (கக)

283. இன்புற்றான் சுக்ரகல்பத் தின்னொரு பிறவி தன்னில்,
சம்புவி தேகந் தன்னில், சேதபாத் திரத்தில், தந்தை
துன்பறு நந்திவர்த்தன் தோன்றலாய் நந்தனென்னும்
பண்புறு நாமந் தாங்கிப் பாரினையாண்டான் மாதோ!

284. அங்கொரு முனியாற் றான்முன்
அடைந்தபற் பவங்க ளோர்ந்தே,
மங்குறு முலக வாழ்வின்
மயக்கறப்பாவனைகள் [1]

---

[1] பாவனைகள் பதினாறு. அவைகள் பின்வருமாறு. 1. தரிசனவி சுத்தி—பகவத் அருகத் பரமேஸ்வரனால் சொல்லப்பட்ட மோக்ஷ மார்க்கத்தை சந்தேகமின்றித் தெளிதல்; 2. வினய சம்பன்னதை —குருக்கள் முதலாயினருள் சத்காரம் பண்ணுதலில் ஆதாரமுடைமை; 3. சீலவிரதங்களில் அநதீசாரம்—சீலங்களையும் விரதங்களையும் பழுதின்றிககாத்தல்; 4. அபீக்ஷண ஞானோபயோகம்—தத்வ ஞானத்தினை நித்தியமும் அப்பியசித்தல்; 5. ஸம்வேகம்—தர்மத்திலும், தர்மபலத்திலும் பிரீதியுடைமை; 6. சக்திதஸ்தியாகம்—தன் சத்திக்குத் தக்கவண்ணம் சத்பாத்ரங்களுள் ஆகாரதானம், அபய தானம், ஞானதானம் பண்ணுதல்; 7. சக்திதஸ்தபஸாவது—தன் சக்திக்குத்தக்கவண்ணம் இந்திரியங்களும் மனமும் தன்வசமாதற் பொருட்டு காயக்லேஸம்பண்ணுதல்; 8. ஸாது ஸமாதி—தபோதனருக்கு யாதானுமொரு காரணத்தினால் தவத்திற்கு விரோதம் வந்தால் அதனை விலக்கி தபசிலே நிவத்தல்; 9. வையா விருத்தியம்—சம்யக் தரிசனாதி குணங்களையுடைய ஜனங்கட்கு துக்கம் வந்தால் அதனைதீர்த்தல்; 10. அருகத்பக்தி—அருகத் பரமேஸ்வரனிடத்தில் எழுகின்றபக்தி; 11. ஆசார்யபக்தி—ஆசார்யர்களிடத்திலெழுகின்றபக்தி; 12 பகுசுருதபக்தி—உபாத்தியாயர்க

துங்கமாய்ச் சேரச்சேர்ந்தான்
துலங்கிடு மச்சுதத்தை
இங்கிரு பத்தீர் காலம்
இந்திர னாகி னானே ! (உக)

285. இப்பெரும் பிறப்பின் வட்டம்
இனிதுறமுடித்தே பின்பு
தப்பிடப் பிறவி யெல்லாம்,
சன்மதி யாகி வந்தோம்
அப்ப ! இவ் வினைகள் போதும்
அழிந்தெழுந் தலைந்த தெல்லாம்
முற்பிறப் பெண்ணில் அந்தோ
மூச்சிழந் தின்ன லுற்றேன் ! (உஉ)

286. எத்தனை மாயை ! வீணில்
எத்தனை மயக்கம் ! பாரில்
எத்தனை பாபம் ! அந்தோ
இறைச்சியு மதுவு முண்டே
மத்தனாய்த் திரிந்தேன் ; மாவாய் !
மண்பொருட் குருடா யிந்த
வித்தைகள் வேண்டாம் ! பூவை
விடுவதே நெறியென்றானே. (உஙு)

287. மறந்துழன் றறந்த விர்த்தே
மாநில மண்ணிற் சேரப்

---

ளிடத்தில் எழுகின்றபக்தி; 13. ப்ரவசனபக்தி—பரமாகமத்தில் எழு கின்றபக்தி; 14. ஆவஸ்யகாபரிஹாணி—ஆவஸ்யகம் ஆறினை சொன் னகாலங்களில் செய்தல்; 15. மார்க்கப் பிரபாவனை—ஞான, தப பூஜாதிகளால் ஜின தர்மத்தினை பிரகாசம் செய்தல்; 16. ப்ரவசன வத்ஸலத்வம்—இறைவனறத் துளார்க் கெல்லாம் இனியராதல். இந்தப்பதினாறு பாவனைகளையும் அனுஷ்டிக்கிற ஆன்மா தீர்த்தங்கர னாய் அவதரிக்கக்கூடிய மஹா புண்ணியத்தையடைகிறது.

பிறந்துழன் றென்ன கண்டோம் !
பிறப்பினை முடித்தலொன்றே
அறிந்தது ; உலகமின்னும்
அறிந்திடாத் துயரில் வீழ்ந்தே
மறிவதைக் கண்டென் னுள்ளம்
மயங்கியே கலங்கு தையோ. (உச)

288. யானிந்தப் பாடு பட்டே
யருகனு கிடினே, மற்றை
மானிடர் உயிர்கள் தீமை
மல்கியே வருந்தி வாடும்
ஊனுடற் றுயர மெண்ணில்
உள்ளெலாம் பதறுதந்தோ !
ஏனினு மிருப்ப தன்னோர்
இன்னலை யகற்று யானே ! (உரு)

289. மேவிமா விரத மாதி,
விளங்கப் பத்தறமும் பற்றி,
ஜீவனின் குணத்தா னங்கள் [2]
பத்து நான் கும் செறிந்தே,
தேவிய லின்ப வெள்ளம்
திகழுற வுலக மெல்லாம்,
போவதே கடன தற்குப்
புரிவது தவமே யென்றான் ! (உசு)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் முற்பிறப்புப் படலம்
முற்றிற்று.

---

[2] குணத்தானங்கள்—குணஸ்தானங்கள். ஜீவன் அசுத்த நிலையிலிருந்து சுத்தபரமாத்ம நிலையை யடையும் வரைக்கும் கடந்து செல்லவேண்டிய பதினான்கு நிலைகள்.

# ௰௪. வைராக்கியப் படலம்.

290. முவ்வறி வால றிந்தும்,
முப்பதாண் டுகள் கழித்தும்,
உய்வகை முயன்றி டாமல்
உலகினில் வாழ்ந்தேன் அந்தோ!
மெய்வகைத் தவங்க ளொன்றும்
மேவிடேன்! உண்மை காண
வையகப் பற்றை நீத்து
வாழ்ந்திலேன் இன்னும் யானே! (௧)

291. அறிவிலா தாற்றப் பட்ட
அவ்வினைக் குறுதி யுண்டு;
அறிந்தும்யான் பற்றி வாழல்
அழகிதோ பிழைவே றுண்டோ?
பிறந்துழன் றிறக்குந் தீமை
பிறந்திடும் வினையின் மூலம்
இறந்திட நோற்ப தே காண்
இனியென்றன் முயற்சி யென்றான். (௨)

292. புவிதருஞ் செல்வ மெல்லாம்
பொட்டென மறைவ தல்லால்
எவை நெடுங் காலம் வாழ்ந்தே
யிறப்பினிற் கறைந்தி டாது?
எவற்றையும் காலன் மேவி
இயற்கையை மாற்றி மாற்றி
பவத்தினில் உழல வைத்தே
பட்டென மறைக்குங் காணாய்! (௩)

293. பெருந்திரட் செல்வ மீன்றேன் !
பிறகுசும் மாடு மில்லை !
பெரும்பெரு மனைக ளெல்லாம்
பிணம் பொரும் பெட்டி யாமோ !
பெருந்திகழ் மணியுஞ் சீரும்,
பின்னரோர் விறகு மாமோ !
பெருங்குழுச் சுற்ற மெல்லாம்
பிடிக்கவோர் காலு மாமோ ! (ச)

294. கட்டை யோடு கழன்றிடு செல்வத்தைத்
திட்ட மென்று தியங்குதல் புந்தியோ ?
நட்ட மெத்தனை நானடைந் தேனிதால் !
விட்டு நீங்கிடல் வேண்டுமின் றேகொலோ ! (ரு)

295. புகல டைக்கும் பொருள்களைச் சீவனின்
பகையென் றெண்ணிப் பழுதற நீக்கிடாய் !
சுகமென் றெண்ணிச் சுருள்பெறும் பந்தத்தை
அகம ழிக்க விடுத்திடல் ஆண்மையோ ? (சு)

296. பூண்டு மெத்தனை பூண்களுஞ் சீர்களும்,
கூண்டினிற் கிளி கொண்டிடு மோசுகம் ?
ஆண்டு மெத்தனை ஆர்புவிச் செல்வமே,
மாண்டு மீண்டும் வருந்திடல் மாண்மையோ ! (எ)

297. உலகக் கூண்டினில் உள்வெளிச் சென்றிட
இலகு மே பிறப்பும் இறப் பும் என்ற
அலவிலாத் துயர் ஆக்கிடும் வாயல்கள்
தலைவ ரே யதைத் தாண்டிச் சுகம்பெற்றார். (அ)

298. இறப்பின் வாயில் இழுத்து வருத்திப்பின்
பிறப்பின் வாயிற் பிணித்துத் திணித்திடும்,

மறப்பினுந் தொடரும் பகை வல்வினை
துறப்பி னல்லது தொத்தினை நீக்குமோ ! (௯)

299. புவியி னிற் பொலியும் பொருள் யாவையும்,
அவியும், மாறும், அலைந்து பின் வீழ்ந்திடும் ;
அவிந்தி டாத தொன் றுத்துமச் சோதியே,
எவரு மில்லை யிதன் றுணை என்றுமே ! (௰)

300. அரவுஞ் சட்டையும் ஆயுதங் கூடும்போல்
உரியு மாவியும் உண்மையில் வேறன்றோ !
கரும மேபவக் காரண மாகிடும் !
றருமமே தவங் கொண்டதைத் தாக்குதல். (௧௧)

301. எண்ணி நம்வினை இன்னும் பெருகிடா
வண்ண மோர்வழி செய்து விடுதலை
நண்ண வன்றோ நரச்சென்மம் வந்துறல் ;
திண்ண மாகத் தெளிகுதி நெஞ்சமே ! (௧௨)

302. வீரனிம் மாற்ற மெண்ணி,
விழியினின் றருவி பாய்ச்சி,
பாரினை மறந்தே, தன்னுட்
பரிவதா யிருக்கும் போது,
சிரணி லோகாந்தீக [1]
தேவர்கள் முன்பு தோன்றி

---

[1] லௌகாந்திக தேவர்கள். இவர்கள் பிரம்ம லோகத்தில் வசிப்பவர்கள். தீர்த்தங்கரர்கள் வைராக்கிய மடையுங் காலத்தில் அவர்களைத்துறக்கும்படி தூண்டுகிறவர்கள். இவர்களுக்கு சிற்றின்பத்தில் விருப்பமே கிடையாது. ஆகையால் இவர்களுக்கு தேவரிஷிகள் என்றும் பெயர் கூறுவர். இவர்கள் அடுத்த ஜன்மத்தில் மனிதர்களாய் பிறந்து தவம் செய்து லோகத்துடன் கூடிய சம்பந்தத்தை ஒழித்து (அந்தியப்படுத்தி) முக்தி பெறுவார்கள். ஆகையால் இவர்களுக்கு லௌகாந்திக தேவர்கள் என்னும் பெயர் உண்டாயிற்று.

பதியிலா மனையே போலும்,
பகலிலா நாளே போலும்,
கதியிலாப் பிள்ளை போலும்,
கண்ணிலான் திருவைப் போலும்,
மதியெலா மறிந்தோய்! எம்மை
வருந்திட விடுக்க லாமோ! (உ0)

310. வானகம் நாணுஞ் சீரும்
வளங்களும் விடுத்தே, வெய்ய
கானக மடுத்த லுற்குக்
கருணையோ ; சுகமோ, ஐய!
தேனுகர் மொழியே! எங்கள்
செல்வமே! சீரே! பேறே!
ஏனிந்த வுடல்வாய் வந்தாய்
எரிக்குனை பிரிவா லெம்மை! (உக)

311. யானை மீ தேறிச் செல்வாய்
அமரருந் துணைகொண் டேக ;
மேனியிற் பூண்பாய் வைர
விதவித வணிக ளெல்லாம்!
மானில மன்னர் போற்ற
மடலரி யணையி ருப்பாய்!
கானமுள் ளுனை வருத்தக்
கருத்தொடுங் காணுவோமோ! (உஉ)

312. மரபினை விளக்க வந்த
மைந்தனிப் படித்து றந்தால்,
அரசினை யாரே காப்பார்?
அழிதலு மதுநன் காமோ?

உரிமையை உதறிச் சென்றால்,
உலகுனை நகைத்தி டாதோ ?
அருமையும் பெருமை யெல்லாம்
ஐயநீ யன்றோ என்றும் ? (௨௩)

313. ஆக்கமும் பொருளு மெங்கள்
ஆயுளும், மனக்க ளிப்பின்
வீக்கமும், புகழும் சீரும்
வீரமும், தவமும், இன்ப
மோக்கமும், உறவு, சுற்றம்,
முயற்சியும், முடிவும், எல்லா
வூக்கமும் நீயே யன்றோ
உயிரினும் காதல் மைந்தா ! (௨௪)

314. முத்தொளி பரவு முன்றன்
முறுவலி லன்றோ கண்ணா !
நித்தமெம் மனம லர்ச்சி
நிறைவது ! புனித னேயுன்
சித்தமு மிரங்கி டாதோ ?
சிந்தனை செய்தெம் பாலே
வைத்துனை நினைப்பாய் ! எங்கள்
வருத்தத்தீ யெரிவ தோராய் ! (௨௫)

315. தழுவினர் ! கட்டினார்கள் !
தண்கணீர் பாய்ச்சி னார்கள் !
அழுதனர் ! புலம்பினார்கள் !
ஆற்றொணா துயிர்த்தார் ! வீரன்
முழுதையுங் கண்டார். பின்பு
மொழியடைத் தயர்ந்தார் ! எல்லாம்

செழுந்திரு மைந்தன் தாங்கிச்
செப்பினுன் சாந்த மாக ! (உசா)

316. அறிவ னுன்றன் அகத்துணர் வன்னையே !
அறிவ னுன்றன் அகத்துயர் தந்தையே !
அறித லாலுல கின்றுயர் யாவையும்
அறிதிர் என்றுயர்க் கேயள வில்லையே. (உஎ)

317. அவரவர் வினை யாற்றிடப் பூவிற்கே
அவரவர் பிறப் பெய்தி யணுகுதல்;
அவரவர் வினை யாற்றி முடித்திடின்,
அவர வர்க்குச் சுதந்திரம் ஆகுமே ! (உஅ)

318. திருவின் மிக்க சிறப்புகள் செய்தெனை
மருக னென்று மயல்கொண்ட நீங்களே
பெருகு மின்பம் பெறச் செல்லும் போதென்னை
அருகு நின்று தடுத்தலு மாகுமோ ! (உகூ)

319. என்ன செல்வமிஃ தென்ன பெரும்புகழ் !
என்ன வின்ப மிதன்மிசை யுள்ளதே ?
தன்னைக் கண்டு தனிக்களிப் பெய்தலின்
என்ன செல்வ மிருக்கின்ற தேழையீர் ! (௩0)

320. பெண் புணர்ந்து பிணியி னகன்றதார் ?
மண் புணர்ந்து மயக்கி னகன்றதார் ?
பொன் புணர்ந்து பொருமை யகன்றதார் ?
தன்ன றிவிற் றளர்ந்தவர் யாவரே ? (௩க)

821. சதமி லாத சகப்பொருள் நீத்தனன்.
நிதமு முள்ள நிசத்தினைத் தேடினன்.
இதமி லாத விகப்பொருள் நீக்கினன்;
சிதைவி லாதொரு சீவனுள் வாழுவோன் ! (௩உ)

322. மயங்கன்மின் பெரியீர் ! என்றன்
வணக்கமோடுரைத்தேன் ! உங்கள்
சுயநல வின்பிற் கென்றன்
றறவினைத் தடுத்தி டாதீர் !
அயர்ந்திடும் நாத வம்சம்
அத்தொடென் றெண்ணி டாதீர்
செயந்தரும் என்றன் வாழ்வே,
செழிப்பிக்கும் திருக்கு லத்தை ! (ஙங)

323. உலகெலாம் பிணி வருந்தி,
ஒருமருந் தறிகி லாமல்
அலமருந் தன்மை தீர்க்க
அங்கங்க ளனைத்து மோதிப்
பலகுறும் பறுத்து வாழ்த்தப்
பாரெனைப் போற்றும் அப்போ,
இலகுறும் உங்கள் பேரும்
மரபொடு மென்று மென்றும் ! (ஙச)

324. * உறவரண் நிலையி லாமை
ஊற்றுல குவர்ப்பு திர்ச்சி
பிறிதின்மை, செறிப்பு, மாற்று,
பேறறி வருமை, தர்மம்,

---

* இந்த செய்யுளில் பன்னிரண்டு அனுப்பிரேக்ஷைகள் கூறப் படுகின்றன. அவைகளாவன:—உறவிலாமை—அன்யத்வம்; அரணிலாமை—அசரணம்; நிலையிலாமை—அனித்யம்; ஊற்று—ஆஸ்ரவம்; உலகு—உலோகம்; உவர்ப்பு—அசுசித்வம்; உதிர்ச்சி—நிர்ஜ்ஜரை; பிறிதின்மை—ஏகத்வம்; செறிப்பு—சம்வரை; மாற்று—ஸம்ஸாரம்; பேறறிவருமை—போதி துர்லபம்; தர்மம் பெறற்கருந்தன்மை—தர்மஸ்வாக்யானம்.

பெறற்கருந் தன்மை தம்மைப்
பினும் பினும் நினைப்பிற் பூண்டால்,
துறப்பதற் குலகை நீரே
தூண்டுவீ ரென்னை யென்றான்! (நடு)

325. குறுகிய அரசுஞ் சீருங்
கொற்றமுஞ் சுற்ற மெல்லாம்
துறவுட னின்று நீத்தேன்!
துணிவுடன் கானஞ் சென்றே
உறவுற வுலகோ ரெல்லாம்,
ஒளியுற வாழ்வு, நல்ல
அறிவினைத் தேடிச் செல்வேன்
அன்னையே விடைத ராயே! (நசு)

326. இங்கினு மிருந்தாற் கால
வேடனுக் கிறையே யாவேன்!
அங்குயா னமர்ந்தாற் சாவு
மணுகிடாச் சித்தி யெய்தி*
எங்கும்நா னிருப்பேன்! எல்லாம்
வல்லவ னாவேன் இன்னும்
உங்குலந் தன்னை விண்ணும்
உலகிலும் விரிய வைப்பேன்! (நஎ)

வேறு

327. அரக்கரின் மாயை யழித்ததே புவியை!
அறமெலாம் அழிந்தே எந்தாய்!
இரக்கமும், அன்பும், ஈகையுந் தவமும்,
இன்பமும் இல்லையே என்றாய்!

---

* சித்தியெய்தி—மோக்ஷத்தையடைந்து.

செருக்கள மாகிச் செவ்விய வுலகம்
சீரழிந் தழியுதே என்றாய்!
தருக்கமுந் தவமும் தன்னலப் பேயுந்
தாண்டவ மாடுதே என்றாய்! (௩௮)

அகவல்.

328 அருட்பணிக் கெழுவன் அருந்தவம் முடித்தே!
இருள்மிடிநீங்க அருட் பணிக்கெழுவன்! (௩௯)

329. உணருமின் ஆவியுள் உணருமின் அன்பீர்!
உணர்வற் றுலகம் உறங்குவ துணர்மின்! (௪௦)

330. சாதிச் சண்டை சமயப் பெரும்போர்,
பேதை யுலகைப் பிளத்தலைக் காணீர்! (௪௧)

331. பாரி லுள்ள பற்பல மாந்தர்
ஓரிடங் கூடிய ஒன்னல ராளுர்! (௪௨)

332. தத்தமதே யெனத் தாழ்த்துவர் பிறரை;
பித்தர் போன்றே பிதற்றுவர் பெருமை! (௪௩)

333. அந்தணர், மற்றோர், ஐந்தாஞ் சாதியர்,
தந்தம துள்ளே தற்கொலை புரிவர்! (௪௪)

334. தாம் பெரி யோரென, தடுத்தே பிறரைத்
தாமே பெரிதெனத் தருக்கி யலைவார்! (௪௫)

335. தீண்டா மையெனுந் தீதுடன், அறிவைத்
தூண்டா மையினுற் சுருங்கிய தறமே! (௪௬)

336. ஒரு மதம் போற்றின் இருமதப் பிணக்கு;
தருமக் கொடியைத் தாங்க முயல்வேன் ! (சஎ)

337. சாவும் நோயுந் தருக்குஞ் செருக்கும்,
நாவிற் கடிமையாம் நரக வாழ்வும், (சஅ)

338. இழவும், அழுகையும், இன்னலுந் துயரும்,
விழுங்கிய வுலகின் வெந்துயர் காணாய். (சகூ)

339. போருங் கொலையும், பொய்யுங் களவும்,
பாரைப் படுத்தும் பாட்டினைப் பாராய் ! (ருய)

340. யாக மென்னும் அருங்கொலை பாராய் !
கூகூ வென்ற கூக்குரல் கேளாய் ! (ருக)

341. ஆடு, கோழிகள், ஆக்களும், புட்கள்
வாடி யிறக்கும் வன்கொலை காணாய் ! (ருஉ)

342. உயிரை யெல்லாம் மயிரென் றெண்ணி
கயவர் சிதைப்பதைக் காணாய், காணாய் ! (ருங)

343. ஊணிலும் உடையிலும் உறக்கச் சுகத்திலும்,
வீணிலும் உலகு வெய்துறல் காணாய் ! (ருச)

344. சொல்லப் போமோ ! சொல்லப் போமோ !
தொல்லுல கத்துயர் சொல்லப் போமோ ! (ருரு)

**வேறு.**

345. கடவுளின் பேரினாற் சூதாடி யுலகங்
கருத்து வெவ்வே றாகியே,
உடல்கொண்ட வேற்றுமைக் குயிர்கொன்று போராடி,
யுலகத்தை நரக மாக்கி,

கடல்கொண்ட தேனைக் கயங்கொண் டளப்பரே
கண்ணிருந்துங் காணிலார் ;
அடங்கொண்ட வாதில் முடங்குண்டு மாந்தர்
அழுக்குற் றிழுக் குற்றனர் ! (ருசு)

346. பஞ்சமா பாதகம் கொஞ்சமோ வுலகிலே
பன்மதச் சண்டை யுட்போர் !
வெஞ்செயற் கறிவை விடுத்தனர் ! விலை வாழ்வு
வாழ்ந்தனர் மெய்ம றந்தே !
மிஞ்சியே பாபங் கொலைகளவு மேவியே
மித்தைக் குழிக்குள் வீழ்வார் !
அஞ்சினேன் ! உருகினேன் ! ஆதலால் ஓர்மருந்
தரணியஞ் சென்றெய் துவேன் ! (ருஎ)

347. வறுமையும், மடமையும், அடிமைத் தனங்களும்,
மண்ணாசை, பொன்னாசையும்,
சிறுமையும், கொடுமையுங் கூரமும், பாபமும்,
சிறுபோர், பெரும் போர்களும்,
வெறுமையும், கருவமும், வீணும், இடம்பமும்
வேற்றுமைப் பிணிக ளெல்லாம்
அறிவினை யழித்தே அறத்தினை யொழித்ததை
யார்கொலோ அறியாதவர் ? (ருஅ)

வேறு.

348. அத்தி யாத்ம விழியை யடைத்தனர்,
சுத்த வுள்ளொளிச் சோதி யறிந்திலர்,
இத்து யர்க்கிரங் கிப்புவி யின்னமும்
செத்தி டாது திருந்திடச் செல்லுவேன் ! (ருகூ)

349. காலத் தின்னலங் கோலத்தைக் காணுவார்
ஏனு மையமும் எத்தனை கோடியே!
ஞாலத்தார்? படைத்தார்? நமரார்கொலோ?
தூலத்தார்? மனச் சூக்குமந் தேர்கிலார்? (சூ0)

350. கடவுளார்? உளரா? கனவா? அவர்
உடலுளார்? உயிர் வந்த தெவ் வாறென,
இடமகன்ற புவி யினியற்கை யென்
கடமை தன்னைக் கருத்துறத் தூண்டுமால்! (சூக)

351. சமய மென்பது சண்டைக்கு மூலமோ?
அமைதி யெய்து மறம்பிரி தில்லையோ?
தமமு றுந்தருக் கற்றுயி ருக்கெல்லாம்
அமையு மோர்நெறி யாதென் றறிகுவேன்! (சூஉ)

352. கடமைக் கேசெல்லு கின்றனன் கானகம்.
உடலத் தின்சுக மொன்றினும் ஆருயிர்க்
கிடம கன்றிடு மின்னலைப் போக்குதல்
திடமனத் தவர் செய்செய லன்றரோ! (சூங)

வேறு.

353. பிறந்தனன் தவத்தால் அந்தப்
பிரியகா ரிணிக்கோர் மைந்தன்,
இறந்துறு முயிரை யெல்லாம்
இன்னல் தீர்த் தெழுப்பி வென்றான்.
மறந்திலம், அவனே யெங்கள்
மாதவத் தெய்வ மென்றே
நிரந்தரம் உலகம் போற்றின்
நின்மர பிறுமோ அன்னாய். (சூச)

354. ஆதலால் அருந்த வத்திற்
கடவியை நோக்கிச் செல்வேன் ;
ஈதலால் உரைகள் வேறே
யியம்பியே காலம் போக்கல்
வாதலால் பயனென் றில்லை ;
மற்றொரு நொடியும் நில்லேன் ;
போதலே புரிந்தேன் ! அன்பீர்
புகலுமின் விடையென் றனே ! (௩௫௫)

355. பாசமும் இழுக்க உள்ளே !
பண்பனின் உறுதியான
தேசுறு மொழிகள் நெஞ்சைத்
தெளித்திட, மனது மிக்க
ஊசலே யாடிற் றன்னோர்
உம்மெனச் சொல்லு முன்னர்
வீசினான் கால்கள். முன்னே
விரைந்தனன் மறைந்தான் மாதோ. (௩௫௬)

356. பற்றினை நீத்திட் டாலும்,
பதவுயர் வடைந்திட் டாலும்,
சுற்றத்தை விலக்கி யின்பச்
சுதந்திர மடைந்திட் டாலும்,
விட்டுத்தம் மைந்தர் நீங்க
விரும்பியே விடை கொடுக்கும்
பெற்றவர் உண்டோ மாயைப்
பிணைப்பு மெல்லியதோ ? சொல்லாய் ! (௩௫௭

357. உருகினார் உள்ளே ; மைந்தன்
ஓடிடுந் திசையை நோக்கி

மருவினர் ! வேளை வென்ற
வடிவினைக் கண்ணி னாலே
பருகினர் ! நெஞ்சில் என்றும்
பதித்தனர் ! பெரிய பாசம்
பிரிந்திட வொண்ணா தோ ஓர்
பிள்ளையின் மிசைபெற் றோர்க்கே ? (ருஎ)

358. யாரென நினைத்தீர் ? எங்கள்
ஐயனைப் பெற்றீர் ! ஆசை
வேருட னறுத்தே, தூய
விமலனே யாகி யிந்தப்
பாருடைத் துயருக் கெல்லாம்
பரிதிபோல் இன்னல் தீர்க்கும்,
ஓர் தனி முதல்வ னன்றோ
உங்களின் மைந்த னானன். (ருஅ)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் வைராக்கியப்படலம்
முற்றிற்று.

---

# ௪௨. துறவுப் படலம்.

359. தேவ ரார்த்தனர் தேவியர் பாடினுர் !
மூவர் மெச்சி முருகக் களித்தனர் !
யாவ ரின்றெம் மருகனைப் போற்றிலார் !
போவ மென்று புரந்தரன் சொல்லினுன். (௧)

360. விண்ட லத்தினர் வேற்றுமை யின்றியே
குண்ட லத்திற் * குழுவினர் கொட்டுடன்.
மண்ட லத்துறு மாதரும் மன்னரும்
எண்டு ளக்குற விங்கெழில் சேர்ந்தனர். (௨)

361. சீருஞ் செல்வமும், செவ்விய போகமும்,
வேரு டன் வெறுத் தல்வியப் பல்லவோ !
பாரு டன்னுள பற்றுகள் யாவையும்
யாரு டன்வெறுத் தார் ? அதி வீரனே ! (௩)

362. அறிவு முற்றிய வையன் மண் விண்ணையும்,
நெறி யுறுத்துவன் என்றிவண் நேர்ந்தனர் ;
துறவு நன்மணச் சோதித் திருப்பொழு
துறவு பூண்ட துலகொடு வானுமே ! (௪)

வேறு

363. வந்தனன் புரந்தரன் வைரத் தேர்மிசை,
வந்தனம் புரிந்தனன் வர்த்த மானனை.
முந்துபற் சிறப்புகள் முழங்க வீந்தனன்,
துந்துமி பேரிகை துவைக்க நீளொலி ! (௫)

---

* குண்டல புறத்தில்

வேறு

364. சுதந்திரச் சோதி மின்னல்
சுடர்விடச் சுத்த னுங்கே,
இதமெனப் புவி நினைத்தே
இத்தனை நாளு மேய்த்த
முதுபெரும் பொருளின் குப்பை
முடித்தனன். வாரி வாரிப்
பொதுசனங் கட்கே முற்றும்
பொருந்திடக் கொடுத்திட் டானே ! (சு)

365. மணிகளும், முத்தும், தங்கம்,
வெள்ளியும், மலைம லையாய்
அணிகளும், திருவும், யானை,
அசுவமும், பசுவும், வீடும்,
துணிகளும், பாத்தி ரங்கள்,
தொகையறத் தானி யங்கள்,
பிணியென அனைத்து மீந்தான் !
பெருந்துற வின்ப முள்ளான் ! (எ)

366. ஆறுநாள் உண்ணு நோன்பை
யனுட்டித்தான்; தேவர் கூட்டம்,
பேறெனப் புகழ வீரன்
சந்திரப் பிரபை மீதில்
ஏறினன் ; சுமந்தார் தேவர்,
இறங்கினன் வனக்கண் டத்தில்;
நூறினன் பற்றை யெல்லாம்;
நுங்கினன் உலக மாயை ! (அ)

367. மார்கழி யுத்தி ரத்தில்,
தசமியின் மாலைப் போதில்,
ஏருயர் நாத ஷண்டம்
இலகிய அசோகி னீழல்
ஆருயர்ப் பளிங்கிக் கல்லில்
வடதிசை அமைய நோக்கி,
வீரருக் கெல்லாம் வீர
வீரனும் விளங்கி னானே! (௬)

368. மண்மனைச் செல்வங் கூலம்,
சேவகர் மனை, விலங்கு,
பண்டிகள், பீடம், பாயல்,
ஆடையும், பாண்டம், பத்தாம்
அண்டிடும் வெளிப் பற்றான
வனைத்தையும் நீக்கி, உள்ளே
மண்டிடும் பதினா லாகும்
பற்றையும் விலக்கி னானே! (௰)

369. ஆடையா பரண மெல்லாம்
ஆருயி ரழுக்கே யாகும்;
பீடையென் றெறிந்தான்; முற்றும்
பிழையறத் துறந்தான்; மேனி
கோடிசூ ரியனை வென்றே
குளிர்க்கதிர் வீச, மின்னற்
கோடிதன் முறுவல் தங்கக்
குணமலை யிருந்திட் டானே! (௧௧)

370. மித்தையும், பெண்மை, யாண்மை,
பேடிமை, நகையுங் கேலி,

நைப்பொடா ரதியுஞ் சோகம்,
நடுக்கமும் தளர்வுந் தன்னை
மெச்சுதல், லோபம் வஞ்சஞ்
சினமழுக் காறு மான
பத்துநால் அந்த ரங்கப்
பற்றையும் விலக்கி ஞனே ! (கஉ)

வேறு.

371. ஐந்துமா விரதமும், பதின றங்களும்,
ஐம்புல னடக்கமும், சமிதி யைந்தொடும்,
ஐம்பதச் சித்தரின் அடிபணிந் துப்பின்,
ஐம்பிடி தனிற்சிகை யனைத்தும் போக்கினன். (கங)

வேறு.

372. அகப்புறப் பற்றி லார்க்கே
யப்படிப் பறிக்க வொண்ணும்
பகவனின் சிகையைத் தேவர்
பளிச்சிடும் பொற்றட் டேந்தி,
உகப்புடன் பாற்கடல்மீ
துறுத்தினர் ; வெண்ணி லாவில்
அகப்படு களங்கம் போன்றே
யாங்கது மிதந்த தம்மா ! (கச)

373. பன்னிரு வருட காலம்
பருவுடல் நினைவி லாமல்
துன்னுறுந் துயரம் யாதுந்
துணிவுடன் றாங்கி யான்ம
வின்பமே யின்ப மாக
விருப்பனென் றோதி னனுக்

கன்னரே மனப்பர் யாய
அறிவுவந் துற்ற தம்மா. (கரு)

374. அகப்புறத் தவங்க ளாறும் [1]
அடைந்தனன்; தனைப் பிணிக்கும்
மிகுந் துயர் இருபத்தீரும் [2]
வென்றவன் துறவின் மன்னன்;
தகைபெறு மேழாந் தானஞ் [3]
சார்ந்தனன் குணத்தில்; எல்லாம்
உகப்புடன் நீத்த வீரன்
ஒளியினை யுரைக்கப் போமோ! (கசு)

375. வானமே கூரை தாங்க,
மதிசுடர் விளக்கந் தாங்க,
மோனமே யுள்ளந் தாங்க,
முத்தியி னொளியைப் பெற்ற
ஞானமே புந்தி தாங்க
நடுவனத் தனிமை தன்னில்,
போனக [4] மின்றி யாறு
மாதங்கள் தவம்பு ரிந்தான்! (கள)

---

[1] அகத்தவம்—அப்பியந்தர தபங்கள் ஆறு. அவை பிராயச் சித்தம், விநயம், வையாவிருத்தியம், ஸ்வாத்யாயம், வியுத்சர்க்கம், தியானம் என்பனவாம். புறத்தவம்—பாஹ்யதவம் ஆறு. அவை அனசனம், அவமோதரியம், விருத்திபரிசங்கியானம், ரசபரித்தி யாகம், விவிக்த சய்யாஸனம், காயக்கிலேசம் என்பனவாம்.

[2] இருப்பதீர் துயர்—22 பரீஷகங்கள்.

[3] ஏழாந்தானம்—ஏழாவது குணஸ்தானமாகிற அப்ரமத்த சம்யதன்.

[4] போனகம்—உணவு.

துன்னுதற் கரிய சோதிச்
சுடரன்றோ ! அவனை யூட்டும்
புண்ணியம் பெரிதே யன்றோ
போந்தது பகுலற் கன்றே ! (௨௩)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜிஞானந்தம் துறவுப் படலம்
முற்றிற்று.



## ௬௩. கடுந்தவப் படலம்.

382. மிகமிக வருமை யாகும்,
மேவினேன் கடவு ளாகும்,
திகம்பர தீக்கை கொண்ட
தீரனும், ஜீனு னந்தம்
அகத்தினி லூற்றெ டுக்க,
யாக்கையை மறந்தே சுற்றிப்
பகைபெறு மனைத்தும் வென்ற
உறுதியைப் பகரு வோமால். (௧)

383. மனப்பரி யாய ஞானம்
மட்டுமே யுதித்த தல்லால்,
அனைத்தையு மறியு மைந்தாம்
அறிவினு முதித்தி டாமல்,
எனைத்தையும் உலகிற் கோத
இச்சையை வைத்தி லானும்,
வனத்திற்கு வனமே சுற்றி,
உள்ளொளி வளர்த்தே சென்றான். (௨)

384. கானக விட்டில், காற்றில்,
மழையிலும், முண்ட மாக,
மோனமாய், உடலெண் ணுமல்,
முத்தியாய் முற்று மாகி,
தானொடு தானே யாகித்
தாரணி விலங்கிற் கெல்லாம்
மாணுறு மன்பே யாகி
மாதவன் திரிந்தான் மாதோ! (௩)

385. முக்கர ணத்தாற் சாந்தன்
முன்னிடான் எதற்குந் தீமை.
மிக்க மெல் லடிக ளோடு
மேதினி தனில் நடப்பான்.
தொக்குறும் உயிர்க ளென்றே
தொடர்ந்துநான் மழைக்கா லத்தில்
அக்கணம் இருந்த வண்ணம்
அவ்வையே தவமி ருப்பான்! (ச)

386. இளவெயில் மகிழத் தென்றல்
இன்பமாய் வீசப் புட்கள்
கலகல வென்னக் கூடிச்
சாந்தனைக் கனிந்து பாட,
பலபல மானினங்கள்
பாய்ந்திடக் களிது ளக்குற்
றிலகிடுங் கான மூர்ந்தான்;
இருடிகள் எதிர்கொண் டேற்றார்! (ரு)

387. அடிமையை நூறி நிற்கும்
அளப்பறு மின்ப வெள்ளம்,
படியினி லிதுவோ! இந்தப்
பசுந்தவ வனமே வேதங்
கொடுத்துநல் லிருடி மார்கள்
குலவிய வறிவி னுக்கே
யடுத்ததோர் அன்னையாக
அருந்தவம் வளர்த்த தம்மா! (சா)

388. கதிரவன் கடமை காட்டும்,
கலைமதி யுலகைக் காட்டும்,
நதிகளும் வாழ்வைக் காட்டும்;
நகங்களுந் தவத்தைக் காட்டும்;

சுதந்திரம் புட்கள் காட்டும் ;
தொகைமிகு மரங்கள் ஈகை
விதந்தனைக் காட்டி நிற்க
விரிமறைச் சுருதியிதே! (எ)

வேறு.

389. பொங்கியெழும் புனற்சுனையும் பொற்புமிகும்
மிப்பொழிலின் போக மல்ல,
இங்குமிளிர் கனியல்ல, புட்களிசை
யின்பமல்ல, புனிதனிச்சை !
வெம்பொறியின் மனடங்க குப்திகளும்
விரதநலம் மேவ, முற்றும்
தன்பொறுமைத் தவமோங்கத் தனிக் கான
வியற்கையவன் றவழ்ந்த வாறே! (அ)

வேறு.

390. மண்மகள் அன்னை ! காற்றே
தந்தை ! உள் ளொளியே நேயன் !
தண் ணுற வாக ! வெய்யில்
தன் னுடன் பிறந்தா னுக,
திண்ணமே துணையாய், நாளுஞ்
செல்வமுந் தவமே யாகிக்
கண் ணுளே விழித்த காட்சிக்
காலவன் கான மூர்ந்தான். (கூ)

391. புள்ளினக் கவிக ளுக்குப்
பூவினம் முறுவல் காட்டும்
அள்ளிடும் அழகு கானத்
தையறி வினங்கள் யாவும் ;

உள்ளெலாம் அன்பி னானே
உறவுடன் அண்டி யிந்த
வள்ளியல் வனத்திற் கேநல்
வரவென வழைத்த வம்மா ! (ய)

392. பாரத நாடு வாழப்
பழம்பெருந் தவமே வாழ,
சீரிய வருகன் வந்தான்,
செறிமினோ காண்போ மென்றே,
ஏர்பெரு மினம ழைத்தே
எதிர்கொளத் துள்ளித் துள்ளி,
ஆரிய மாடி மான்கள்
அழகென மிளிர்ந்த வம்மா ! (க)

393. நின்றஆ னிறையின் சேய்கள்
நீள்முலை யுண்டி டாமல் ;
நன்று செய் நாத னுற்றான்,
நற்றவ முனிவ னுற்றான் !
இன்றிவர்க் கூட்டு கென்றே,
எடுத்துவாய் மடுவி னின்றே,
குன்றுய ரத்திற் றள்ளிக்
குதித்தெதி ரழைத்த வம்மா ! (உ)

394. தீங்கறு விலங்கின் கூட்டம் .
திசைதிசை வரவு கூறி,
"நாங்கள்வெம் புலியி னத்தால்
நலிவுறல் நீங்க வேண்டும் !
தாங்களே யன்பு செய்வீர்
சரண்" என்ப போன்ற வம்மா !

வீங்கருள் முனியைக் காண
விலங்கிற்கு மின்ப மன்றே. (௩௫)

395. பதுங்கிடு நரியும் வேங்கை
யரியினம், பண்பின் மிக்க
முதிர்ந்திடு மன்பன் முன்னே
முள்ளிழுத் தன்போ டண்மி,
கதந்தரும் பாவ மூழ்கிக்
கடுங்கொலை யூனையுண்ணு
விதந்தனை யுரைப்பீ ரென்ன
விளம்புவ போன்ற மாதோ! (௧௪)

396. பொறுமையே முடியாய், மார்பிற்
பொருவரு மருள்பி றங்க,
நிறைதவ முடுத்தே, செங்கோல்
நிலைபெறு மன்பே யாக,
திறமையே நல்கிப் பஞ்ச
பூதமும் சேவை செய்ய,
அறமதே யுருவாம் எங்கள்
அரசனும் உலவி னனே! (௧௫)

397. ஆருயி ருலகிற் கெல்லாம்
அருட்குடை பிடிக்கு நாதன்
ஊரினும் மலைவ னத்தும்
உலவிடும் போது மாயப்
பாரினி லழுந்து மாந்தர்
பாசமாக் காடு தன்னில்
ஆருயிர்க் கன்பி லார் கை
அளவில வருந்தி னனே! (௧௬)

398. யாரிவன் முண்ட மென்பார் !
கல்லெடுத் தடிப்பார் ! ஏசி
நேரினிற் பெண்கள் கண்டால்,
நிறைகுறை வார்க ளென்பார் !
காரிய வூமை யென்பார் !
கடுகள விரங்கீர் என்பார்
ஊரைவிட் டிவனை யின்றே
ஓட்டிடு மென்பார் மாதோ ! (கஎ)

399. அன்பனைப் போலி யென்பார் ;
அறிஞனை யறியா னென்பார் ;
இன்புறு மோனி தன்னை
ஏழையுங் கோழை யென்பார் ;
துன்பத்தைத் துடைக்கு மன்புத்
துணைவனைத் தூற்று வார்கள் !
வன்மனத் தோரின் பூமி
வாய்மையை யுணர்ந்தி டாதே ! (கஅ)

400. போதமெய்ச் சோதி நாதன்
பூரணப் பொறுமை பேணி
வாதமும் நோவுந் தாவும்,
வஞ்சமும் அகந்தை மிஞ்சுந்
தீதினை ரிழைத்த தெல்லாம்
சேய்களின் ஆட லென்றே,
கோதிலா முறுவல் செய்தே
குணக்கதிர் பொலிந்தான் மாதோ ! (கக)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்தபாரதியார் பாடிய
ஜிஞனந்தம் கடுந்தவப் படலம்,
முற்றிற்று.

## கச. அதி மஹாவீரப் படலம்.

401. அச்சமும் நடுக்கமும் அற்றெவர் கொலோ
நச்சர வுலவிடும் நள்ளிரா வினில்,
துச்சமா யுடலினைத் துணிந்து, பேயுலாம்
உச்சினிச் சுடுவன முரைய வல்லவர்? (க)

402. அலகைகள் வெறியுடன் அங்கு மிங்குமாய்
உலவிடும்! எரிபிணம் உற்றெ மூந்திடும்!
விலங்குகள் பிணந்தரும் விருந்த ருந்தியே,
கலகல வெனக்குடல் கலக்குங் கானரோ! (உ)

403. மதிமிக வுறுதியன், மனதை வென்றவன்,
எதுவுமிவ் வுலகினில் இணையி லாதவன்,
அதிமுத்த மென்னுமிவ் வலகைக் காட்டினிற்
பதுமையின் யோகத்திற் பதிந்தி ருந்தனன். (ங)

404. கொன்று தின்னுங் கொடியரின் நெஞ்சமோ!
பன்றி காமப் பதடிகள் வெம்மையோ!
இன்றிக் கானகம் மூழ்கு மிருட்கடல்,
ஒன்றி னுமுவமை பெறுததே! (ச)

405. கவ்வு வெம்புலி யென்னக் கலித்தெழும்,
வெவ்வி யப் பனி வாடையில் வேந்தனே,
இவ்வி ருட்குகை யிற்பயில் மெய்த்தவம்
எவ்வ ராலு மியற்றிட வொண்ணதோ! (ரு)

406. பொறையி னெல்லை கடந்த புலவனும்,
நிறைத வத்தில் நிலைத்தனன் ; சுற்றிலும்
உறைவி லங்கொடு பேய்களும் முற்றன ;
சிறைசெய்தே, பெருங் கூக்குரல் செய்தன ! (சு)

வேறு.

407. மையிருள், சுற்றும் ! வானில்
மழை, யிடி, மின்னல் ! எங்கும்
பையர வங்கள் சீற்றம் !
பாய்புலி நரிகள் கூட்டம் !
வெய்யபேய் நடனம் ! இந்த
வெருவுரு காட்சி யெல்லாம்
ஐயனைக் கலைக்கு மோதான் ?
அசைவற விருந்தான் மாதோ ! (எ)

408. என்றிலுங் கொடிய காட்சி
விலங்குக ளிடும்பை யம்மா !
இன்றிவண் நச்சு யிர்கள்
எத்தனை இவன் முன்சீறிப்
பொன்றிட முடிப்ப போலப்
புஸ்ஸென நின்ற ! எல்லாம்
ஒன்றுமே மதியான், வீர
வுயர்நிலை யிருந்தான் மாதோ ! (அ)

வேறு

409. தடதட வென்றது தாங்க ரும் மிடி !
மடமட வென்றது வான மாரியும் !
கடகட வென்றன கருங் குறள்களும் !
திடமுட னிருந்தனன், திண்மைக் காழியான் ! (கூ)

வேறு.

410. ஊழியி னிடி வீழ்ந் தாலும்,
உம்பரின் பகைவந் தாலும்,
ஆழியே திரண்டு வந்தே
அழுங்குற விழுங்கினாலும்,
பாழ்நர கெதிரிட்டாலும்
படுகொலை குறுக்கிட் டாலும்,
ஆழ்தவ முடையோர், சிந்தை
அசைந்தலைந் திணங்க லாமோ! (௧௦)

411. பட்டென முன்னர் கண்ட
பயங்கர விருள் நீங் கிற்றே!
பொட்டெனச் சூழ்ந்தார் சுற்றும்
பொருவரு மழகின் மின்னார்!
கொட்டினார்! பாடினார்கள்!
கூத்துகள் புரிந்தார்! காமக்
கட்டினிற் படுத்தும் வெய்ய
களிநகை புரிந்து நின்றார்! (௧௧)

412. துயில விழ்த் துடன் சிரித்தார்!
தொழுதனர்! மதன காம
மயல்விழி யுருட்டி னார்கள்!
மருட்டினர் மார்பைக் காட்டி!
புயலெழ விம்மிக் "காதல்
பொறுக்கில" மென்றார்! எல்லாம்
அயலெனான், மதியான், இன்னும்
அசைந்திலான், இருந்திட்டானே! (௧௨)

413. பார்த்தனர் முடிந்த மட்டும் ;
பட்டென மறைந்தார் வீணாய் ;
தீர்த்தனின் முன்னே வந்தான்
தேவனாந் தாணு வென்பான் ;
ஆர்த்தனன் "தேவ தேவா
அடியனுன் சரணம் உன்றன்
பேர்த்திறல் அறிவ தற்கே
பிழை யிவை செய்தேன்," என்றான். (கங)

414. அடரிருட் காட்டிற் கஞ்சாய் !
பேய்களின் அரற்றிற் கஞ்சாய் !
படமணிப் பாம்பிற் கஞ்சாய் !
படுசினப் புலிக்கு மஞ்சாய் !
விடங்கிளர் முலைக்கு மஞ்சாய்,
மையலார் விழிக்கு மஞ்சாய்,
அடிதொழு திடுவே னுன்னை
அதிமஹா வீர னென்றே ! (கச)

415. பொறையினிற் பூமி யானாய் !
புனிதத்திற் கங்கை யானாய் !
துறவினிற் காற்றே யானாய் !
தொத்தினுக் கெரியே யானாய் !
பிறவுயிர்க் குயிரே யானாய் !
பெரியவ னெவர்க்கு மானாய் !
அறிவினுக் காழியானாய் !
அதிமஹா வீர வீர ! (கரு)

416. நெருப்பிடைத் தங்கம் போல

நீள்வரைப் பொறுமை யோடுன்

பெருக்கிய தவத்தாற் சோதி

பிறங்கிடும் பெரிய சாமீ!

மருட் கெலாம் மாற்றே யன்பர்

மனமலர் மாலை சூடும்

அருட்கொடி வேந்தே என்றன்

அதிமஹா வீர வீர! (கசு)

417. கண்டிராப் பிழையுங் கண்டுங்

கைதொழாப் பிழையும், தேவாய்க்

கொண்டிடாப் பிழையும், நெஞ்சிற்

குறித்திடாப் பிழையும், போதம்

உண்டிடாப் பிழையும், மன்னித்

துன்னடி நிழலிற் பேதை

அண்டிடாப் பிழையுந் தீர்ப்பாய்!

அதிமஹா வீர வீர! (கஎ)

418. அச்சத்தால் உன்ற வத்தை

யளந்திட நினைத்த வெல்லாம்,

துச்சனென் றெனையே காட்டித்

துயர்க்கடல் மூழ்க்கிற் றைய!

எச்சினேன்! சோத னைகள்

இனியொன் றுமில்லை என்னை

அச்சுதா மன்னிப்பாயே!

அதிமஹா வீர வீர! (கஅ)

419. இன்னது சொல்லி வீழ,
இரங்கியே, ஐயன் ஆழ்ந்த
புன்னகை மின்ன லாலே
பொறுமையு மன்புங் காட்டி,
அன்னரே சென்றுன் வீரன்
அன்பழ கமர்ந்த நல்லாள்
கன்னிசந் தனையே வாழுங்
கடிநகர் குசாம்பி மாதோ ! (கசூ)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் அதிமஹாவீரப் படலம்
முற்றிற்று.

---

## கரு. சந்தனைப் படலம்.

420. மின்னல் மேனியள், மெல்லிய தன்மையள்,
அன்ன மன்ன வமுத நடையினள்,
இன்ன மின்ன மெனவிழி நோக்கிடுந்
தன்னைப் பற்ற தளிரிளஞ் சந்தனை ! (க)

421. மன்னன் சேடகன் பெற்ற மலர்மகள்,
அண்ண லின்னிள மன்னை யிவள் கொலோ !
வன்ன மாமரச் சோலை வசந்தத்தில்
சொன்ன மாமயி லென்னத் துலங்கினள் ! (உ)

422. மேக வானத்தில் மின்றிர ளென்னவே,
தோகை யப்பழஞ் சோலை யுலாவினள் !
வேக வாசை விழுங்கிய வோர் மனே
வேக னென்னும் வித்யாதரன் றேன்றினன். (ங)

423. கண்டனன் இந்தக் காணரும் பொற்பினை ;
உண்டனன் னழகை உளக் கண்ணினல் ;
அண்டினன் ; அழியாக் கற்பி னன்னத்தைக்
கொண்டு வானத்திற் குப் பெனச் சென்றனன் ! (ச)

வேறு.

424. ஆவென அலறினள் அங்கம் வேர்த்தனள் !
ஓவென துயிர் நிலை கற்பென் றேதுவாள் !
ஏயெனக் கொடியனை இடித்துச் சொல்லுவாள் !
தாயினை மதித்திலான், சாற்று வானரோ ! (ரு)

வேறு.

425. கோலங் கொடு கூற்று நுழைந் ததுவோ !
ஆலங் கொடு மவ்விழி யம்புகளோ
வேளுங் கொடு வீரரை வாட்டிடுமே !
காலங் கெட விட்டிடல் கார் விழியே ! (சு)

வேறு.

426. வாரண மதத்தை யுள்ளே
வைத்ததோர் வட்டமான,
பூரண கும்ப மென்னப்
பூண்முலைப் பொற்பினளே !
காரணம் வேண்டு மோ? உன்
கட்டழ கொளியே யென்னைப்
போரணி யாசை தூண்டிப்
புந்தியை யிழுத்த தென்றான். (எ)

427. என்றதைக் கேட்டாள் ! நொந்தாள் !
இதமொழி சொல்லிக் கேளான்.
கன்றிய மொழிக ளாலே,
"காமப்பேய்க் கடிமைப் பட்ட
பன்றியோ விலங்கோ என்றன்
பழுதறுங் கற்பிற் பூத்த,
வன்றவங் கெடுத்தால் வீழ்வாய் !
வானவ ! நரக", மென்பாள். (அ)

428. தெரிந்திலன், கண்ணே ! மாதர்
படையுடன் தென்ற லேறி,

விரிமதிக் குடைக வித்தே,
விற்கரும் பேந்தி மோதிக்
குரைகடல் முரச மாகக்
குயில்கள்கா களம தாக,
அரும்பருங் கணைக ளாக
அனங்கன்செய் போரி தென்றான். (கூ)

429. கலைந்திடு மேகம் போலும்,
கஞ்சத்தி லெழுத்தே போலும்,
குலைந்திடு நெஞ்சைப் புல்லிக்
கூற்றினுங் கொடுமை யாக,
விலைகொளுங் காம வாயில்,
வீழ்பவர் பிணித விப்பார் !
மலைந்திடாய் ! விடுவாய் ! ஆசை
மறந்தவர்க் கின்ப மென்றாள். (ய)

430. என்னாநற் சொற்கு மன்னேன்
இணங்கிடாச் சென்ற வெல்லை,
திண்ணமா தவத்தாள் கற்பின்
திறமதோ வறிகிலே மால் !
முன்னரே மணந்த இல்லாள்
முனிவளென் றஞ்சி யிந்தப்
பொன்னியை அரணி யத்தின்
புதரிடை விடுத்துச் சென்றான். (கக)

431. கும்மெனும் மையி ருட்டும்,
குறள்களின் வெருவு நோக்கும்,
வெம்மனப் பசியோர் வெய்ய
விழைவினல் அலைவ போலும்

பொம்மென உறுமி மாக்கள்
புலவுண வருந்தி யெங்கும்
தம்மன படியே செல்லுந்
தனிமையி லிருந்தா ளன்னை ! (கஉ.)

432. வெருவுறக் காணுங் காட்சி
வெருவிடாள் ; பொறுமை யாக,
அருகவோம் ! சித்தஓம் ஓம் !
ஆசவோம் குருவோம் சாது,
வருகவோம் என்றே எண்ணி
வாலிருள் இரவைப் போக்க,
அருகனி னருளைப் போன்றே
ஆதவ னுதித்தா னம்மா ! (கங)

433. அருகவோம் சித்த வோம் வோம்
ஆசவோம் குருவோம் சாது
வருகவோம் ! வரனே ! மாலே !
வாமனே ! தேவ தேவா !
கருணையோய் ! காட்சி ஞானக்
கதிர்விடுஞ் சோதி யோம் ஓம்
அருட்பெரும் ஆதி நாதா
அடியனுன் சரணம் புக்கேன் ! (கச)

434. இவ்வகை யுருகி நெஞ்சி
லிறைவனே துணையாய் நிற்குஞ்
செவ்வியை யெடுத்தோர் வேடன்
சென்றனன் கௌசாம் பிக்கே ;
அவ்வையின் விடப சேன
வணிகனுக் கவளை விற்றான் ;

நல்விளங் கனியை யன்னோன்
நன்மக ளெனவ ளர்த்தான்! (கரு)

435. செல்வமே! சிறப்பே! என்றன்
சேமமே யென்று செட்டி
நல்வகைப் பரிவி னோடும்
நங்கையைப் போற்று நாளில்,
சொல்லொணுக் கற்பும் பொற்புந்
துலங்கிடு மவள்மீ தன்னோன்
இல்லறக் கிழத்தி தீய
விதயத்தில் அழுக்குற் ருளே! (கசு)

436. "அவளழ கவனை ஈர்த்தென்
னன்பினைப் பிழைத்த" தென்றே,
குவளை நாண் கண்ணி னளைக்
குரு குரு வெனவே பார்த்தே,
இவளையென் நாதன் காணு
திருட்டறை யிடுவேன்" என்ருள்.
எவளழுக் காற்றி னலே
இன்னலாங் குருடி யாகாள்? (கஎ)

437. சுபத்திரை யென்னு மந்தச்
சுடுசர விழியாள், நாளும்
அவத்திர னிழைத்தா ளந்த
வற்புதக் கற்ப ணங்கைப்
பவத்திர ளெனவி ருண்ட
வறையினிற் பதுக்கி வைத்தாள்,
தவத்திரள் சந்தனை தன்
தாள்கைக்கும் விலங்கிட் டாளே! (கஅ)

438. கந்தையே சுற்றிக் கேப்பைக்
கஞ்சியே வார்த்தாள், வைதாள்!
வெந்துய ரிழைத்தாள்; எல்லாம்
வினையெனப் பொறுத்தாள் நல்லாள்;
சிந்தையி லைவ * ரெண்ணத்
திகழுறப் பிறம றந்தாள்,
எந்தத்தீ துறினும் அன்பிற்
கரைத்தொளி யிலகு நீராள்! (௧௯)

439. "வெஞ்சிறைப் பட்டேன் பூவில்!
விடுதலை யிழந்தேன்! ஆரக்
கஞ்சியை யுண்டே, பீறற்
கந்தையே யுடுத்தே னேனும்,
நெஞ்சினு ளன்பே யெண்ணி,
நீள்வினை தீரு மென்றே,
அஞ்சிடா துள்ளேன் ஆதீ!
அருகனே அருளே" யென்பாள்! (௨௦)

440. "வணங்கிடுங் கையில் வெய்ய
வஞ்சகத் தளைகள் பாராய்!
பணிந்திடு மேனிக் கிந்தப்
பாழிருட் சிறையோ, என்றாய்,
தணிந்தனன்!" என்ன நாளுந்
தகை பெறு மன்பினோடும்
பணிந்தனள், அண்ணல் தன்னைப்
பதித்துள்ளே பார்க்கும் நல்லாள்! (௨௧)

441. வருகுவார் ஒரு நாள்! என்றன்
வல்வினை யெல்லாந் தீரப்

---

* ஐவர்—பஞ்ச பரமேஷ்டிகள்.

பருகுவார் என்றன் கூழை !
    பரிவகக் கருணையாலே,
தருகுவார் அருளை ! என்றன்
    றளைகளைப் பொடிப்பா ரென்றே
உருகுவாள் ! களிக்க வீரன்
    ஊருற்ற தறிந்திட் டாளே ! (உஉ)

442 அங்கரத் தரியு நாண
    அவனியோ ரரியே போலச்
சுந்தரச் சோதி நாதன்
    துலங்கினன் தெருவில் ; வானச்
சந்திரன் மீன்கள் தோறுந்
    தங்கியே செல்வ தொப்ப,
வந்தனை வணக்கஞ் செய்ய
    மனைதோறும் நின்று சென்றான். (உரு)

443. சந்தனை கேட்டாள் !; பொங்கிச்
    சாந்தனுக் கன்று கூழை
வந்தனை யுடன ளிக்க
    மனத்தினி லெண்ணி, யன்னோன்
சிந்தையே பூண்டாள் ; ஐயன்
    செறிந்திடுந் திருவைக் கண்டாள்.
பந்தனை விலகி யின்பம்
    பழுத்திடக் கண்டாள் மாதோ ! (உச)

வேறு.

444. பட்டென் விழுந்தன பாழ் விலங்குகள் !
பட்டணி யானது பாழுங் கந்தையே !
சட்டியிற் கஞ்சியுஞ் சாதமாகப் பொன்
வட்டினில் கண்டனள், வரனைக் கண்டனள். (உரு)

வேறு.

445. திங்கள் கண்டு திறை கட லெங்கிலும்,
பொங்கு பான்மையிற் போதகன் வாண்முகச்
செங்க திர்கண்டு செவ்வியி னின்மனப்
பங்கையம் மலர்ந்தே பளிச் சிட்டதால். (உசா)

வேறு.

446. அருளின் வந்ததிவ் வுலகெலாம் அளித்துயிர் தேடும்
பொருளைத் தந்தது! புனிதரிற் புனிதமா தவத்தின்
கருணை கண்டது; களிப்பினைப் பரப்பிய தெங்கும்,
தெருளை யூட்டிய திவ்ய முனிக்கனி யம்மா! (உஎ)

வேறு.

447. அன்புரு வாகச் சோதி
யழகு பொன் மணி களாக
இன்புமெய் முறுவல் செய்த
விளங்கதிர் முகத்தைக் கண்டாள்!
"என்குலத் தெய்வமே என்
இறைவனே! நிற்க, நிற்க!
எங்கிலும் கருணை சிந்தும்
எந்தலே! சாமீ" என்றாள். (உஅ)

வேறு.

448. நிதிக் குகந்த நற்றவம்,
நிவந்த கீர்த்தி, நல்வளம்,
பதிக் குகந்த பெண்டிரும்,
பலத்தின் வீர மைந்த ரும்,

துதித் துனைத் தொழுதவர்
துலங் கினர் விடு தலை !
கதிக் குநற் றுணைவனே !
கருத் திலங்கு சோதியே ! (உ.கூ)

449. கனத்த மாயை காயினுங்
கவலை யென்னை வாட்டினும்,
சினப் பகை செருக் கினுஞ்
சிறை யிருள் ஒடுக்கினும்,
மனப் பகை யிலாத சாந்த
வாய்மைதன்னைப் போற்றினேன் !
உனக் குடல் ! உனக்குயிர் !
உனக் கனைத்து மாகவே ! (ரு0)

450. செருக் குறும் பகைத்திரள்
செகுத்து நின்ற போதிலும்,
நெருப்பு கக்கு நஞ்சு மென்னை
நேரி ருந்து காயினும்,
இரக்க மற்ற வெம்பசி
யெனைப் பிடுங்கி வாட் டினும்,
அரக்கர் மாயஞ் செய்யினும்,
அருக வுன்ன ருட்டுணை ! (ருக)

வேறு.

451. அரியவ, பெரிய வென்றே,
அடிகளைப் போற்றி யன்னை
விரிமலர்ப் பதந்து டைத்து
வீற்றியே யமுத ளித்தாள் !

விருப்பொடு முண்டான் ; ஐந்து
வியப்புக ளிலகக் கண்டே,
அருகனை மீண்டும், மீண்டும்,
அடிபணிந் தேத்தினளே ! (ருஉ)

452. புகையொடு தீயுங் காட்டிப்
பூசனைத் துதிகள் செய்தாள்,
" தகைபெறு மொளியே ! என்றன்
சரிதையீ" தென்று முன்னே,
அகத்தினி லறிந்தான் ஐயன் ;
அதிசயம் வணிகன் கண்டே,
சிகப்புறுஞ் சினத்தி னோடு
செருத்தனன் மனைவி தன்னை ! (ருரு)

வேறு.

453. உணர்ந்தனள் சுபத்திரை ஊறு செய்ததை ;
பணிந்தனள் தேவியைப் பரிவு கேட்டனள் ;
பணிந்தனள் பகவனைப் பாபம் நீங்கினள் ;
குணமுடன் திருந்தினள் கோத முந்தனள். (ருச)

454. புன்சிரிப் பொளியினைப் பொலிவித் தன்பருள்
மன்னவன் ஏகினன் வனத்திற் கன்னரே ;
தன்னையே யவன் பணிக் களித்த சந்தனை
மன்னுயிர் புகழ்ந்திட மகிழு மெல்லையில், (ருரு)

455. அங்ககர் அரசியிவ் வதிச யங்களைச்
சிந்தையில் வியந்தனள் ; தெரிய வோர் பகல்.
சந்தனை தன்னையே சார்தலும், ஒரே
தந்தையின் மகளெனத் தழுவி யேற்றனள். (ருசா)

### வேறு

456. மிருகாவதி யென்று மிளிர்ப் பெயராள்,
உருகித் தன தோடு முதித்த வளைப்
பெரு காதலி னோடு பிறங்கி டவே
அருகாவியி னற்றுணை யாக்கி னளே! (௫எ)

457. அருகக் கதிர் வீசு மருட் பணியே,
தருமம் மெனப் பூண்டனள் சந்தனையே.
திரு வின்மிகு செவ்விய பற்ப லரை
உரு கும் மடி யார்செய் துயர்ந் தனளே! (௫அ)

458. இவ்வகை யன்பினுளுக்
கிரக்கமுற் றருளி னுனும்,
ஒவ்வறு தவத்தை யாற்றி
ஒண்டியாய்ப் பனிரண் டாண்டு
ஒவ்வொரு தலமாய்ச் சுற்றி,
யுலகளந் திறுதி ஞானம்,
செவ்வையாய்த் தெளிய வெண்ணிச்
சிரும்பிகை வந்தான் மாதோ! (௫௯)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் சந்தனைப் படலம்
முற்றிற்று.

---

## கசுா. கேவலஞானப் படலம்.

459. மாலைக் கதி ரொளி பொன்னிட,
மகிழ்ந் தாடிடத் தென்றல்,
சோலைக் குயில் கிளிகட் கிசை
கொஞ்சித் தெரி தரவே,
கோலத் திரு விழி மானினங்
கூட்டத் துடன் இலக,
நீலத் திரு விரிவா னகம்
நெஞ்சக்களி யுதவும்! (க)

வேறு.

460. மேதினியி னெல்லையறு மின்றவழ்வ நேர,
தீதறு தவப் பொழிற் சிறப்பினை யிசைத்தே,
ஈதலி னியல் பெருகு கைவளமை யென்ன,
சோதி ரிசு கூல நதி சூட்டிடு மலங்கல்! (உ)

461. அன்னை யென லாமிதனை யாரமு தளித்தே,
மன்னுயி ருடற்குலம் வளர்த்திடு திறத்தால்;
தன்னிக ரிலாததெளி வுஞ்சுவை தரித்தே,
இனிய வருட்கவி யெனப்பெருகி யோடும்! (ங)

462. கவின்பெறு பசும்பொழில் கருத்தினமு தான
வியன்பெறு சிரும்பை நகர் மேவியருள் நாதன்
செயம் பெறு விசாகதச மித்திதியி லிந்து
வயங்கிட வருக்க னெடு மாதவ மிருந்தான். (ச)

வேறு.

463. நீதி மன்னன் நிழற் குடை போன்றதோ
சோதி யாலயத் தோற்ற மிது கொலோ!
தாது பூமலிச் சால மரத்தடி,
மீதி ருந்து மிளிர்ந்தனன் சாந்தனே! (ரு)

வேறு.

464. வேறிய துறவெல்லாம் மீன ரசரோ
வீரிய வுன்னதே, விண்ம ணியெனக்
கூறிய மாற்றமே! கூடி யுத்தரம்
சூரிய சந்திரர் துலங்க லின்று காண்! (சு)

465. தீர்த்தவுன் னுள்ளெழுந் தெளிய ஞானமே
பாரினை வளஞ்செய்தே பருகு வித்திடும்;
சீரிய புனிதனற் றேவ வென்னவே,
வாரியை யொலித்துறும் வளஞ்செய் யாறுகாண். (எ)

466. பிழைத்திடப் பசியறப் பேதை வையகம்
அழைத்தறக் கனிதரும் அடிநன் னீழலிற்
செழிக்குக வுன்றிரு வென்னச் செப்பியே,
தழைத்திடு முயர் பெருஞ் சாலமா மரம்! (அ)

வேறு,

467. மனதினைப் புந்தி தன்னில்
மறந்தனன்; ஆழவெண்ணிக்
குணப்படிப் படியாய் வென்றே
குலவினான் பனிரண்டை;*

---

* க்ஷீணகஷாய வீதராக சத்மஸ்த குணஸ்தானம்.

## கசு. கேவலஞானப் படலம்.

459. மாலைக் கதி ரொளி பொன்னிட,
மகிழ்ந் தாடிடத் தென்றல்,
சோலைக் குயில் கிளிகட் கிசை
கொஞ்சித் தெரி தரவே,
கோலத் திரு விழி மானினங்
கூட்டத் துடன் இலக,
நீலத் திரு விரிவா னகம்
நெஞ்சக்களி யுதவும்! (க)

வேறு.

460. மேதினியி னெல்லையறு மின்றவழ்வ நேர,
தீதறு தவப் பொழிற் சிறப்பினை யிசைத்தே,
ஈதலி னியல் பெருகு கைவளமை யென்ன,
சோதி ரிசு கூல நதி சூட்டிடு மலங்கல்! (உ)

461. அன்னை யென லாமிதனை யாரமு தளித்தே,
மன்னுயி ருடற்குலம் வளர்த்திடு திறத்தால்;
தன்னிக ரிலாததெளி வுஞ்சுவை தரித்தே,
இனிய வருட்கவி யெனப்பெருகி யோடும்! (ங)

462. கவின்பெறு பசும்பொழில் கருத்தினமு தான
வியன்பெறு சிரும்பை நகர் மேவியருள் நாதன்
செயம் பெறு விசாகதச மித்திதியி லிந்து
வயங்கிட வருக்க னெடு மாதவ மிருந்தான். (ச)

நல்லார்கள் செயவென்னல், நற்பதத்தில்
மலர்வைத்தல், திகிரி சுற்றல்,
எல்லாத்தி சையும்வானந் தெளிதல், மலர்
பூத்தல், இளம் இன்கால் வீசல்,
வல்லானுக் கமரர்களும் பணிசெய்தல்,
வந்தனவன் றவத்தா லன்றோ ! (கங)

வேறு.

472. வந்தனர் தேவர்கள் வாழி யென்றனர் !
வந்தனம் புரிந்தனர் ! வழிபட் டேத்தினர் ;
முந்துறக் கேவல மண முடித்தனர் ;
சிந்தையிற் களித்தனர் தெய்வ மென்றனர். (கச)

வேறு.

473. நானெலாம், அதுவெலாம், முதலெலாம்,
முடிவெலாம், நடுவெலாங் காட்சி யெல்லாம்,
வானெலாந் தீயெலாம், ஒளியெலாம், புவியெலாம்,
வளமெலாம், அன்னமெல்லாம்,
கானெலாம், மலையெலாம், ஆறெலாம், சுனையெலாம்,
கடலெலாங் காற்று மெல்லாம்,
ஊனெலாம், வடிவெலாம், நிறமெலாந் திறமெலாம்,
உயிரெலாம், உணர்வு மெல்லாம்,
ஏனெலாம், எதுவெலாம், எங்கெலாம், அங்கெலாம்,
இதுவெலாம், எனது மெல்லாம்,
தானெலாம், நிலையெலாம், தவமெலாம், ஆனந்தத்
தன்மையின் றத்துவ மெலாம்,
ஆணெலாம், பெண்ணெலாம், ஆருயிர்ப் பிரிவினுக்
கன்னையப்பன் அன்பெலாம்,

தேனெலாம், பழமெலாம், அமுதெலாம்,
சுவையெலாந் தித்திக்கு மின்ப மெல்லாம்,
காணலாம், முகரலாம், நுகரலாம், கேட்கலாம்,
காதலாங் காட்சி யெல்லாம்,
கோனெலாங் குடியெல்லாம், விதியெலாம்,
வினையெல்லாம், குறியெலா மறிவு மெல்லாம்,
ஈனலும் பேணலும், ஏகலும், வருதலும்,
இன்னலுந் துன்பமெல்லாம்,
மோனவா னந்தசுத் தானந்த வெள்ளமாய்
முத்திக் கனிக்கு வித்தாய்,
மாணவென் வாழ்வினுக் காதியுஞ் சோதியும்,
மலைபோன்ற துணையு முறவும்,
தானமுந் தவமுஞ் சுயேச்சையும், இன்பமும்,
சாந்தவா னந்த மெல்லாம்,
ஆனவா ! என்னவா ! என்னுள்வா வென்னுமுன்
ஆண்டிடும், அருகவாழ்க !
ஞானவா னந்தனே நாதனே ஆதியே,
ஓம் நமோ அர ஹந்தனே ! (கரு)

474. இந்திரன் குபேரனோ டெழுந்திவண் ணிறங்கியே
எந்தையை வணங்கினன்! இசைமகிழ்ந்து பாடினன்!
சந்ததம் அருகமே தழைத்திடத் திருச்சபை
முந்துறச் சமைத்தனன் முதல்வனும்
விளங்கவே ! (கசு)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் கேவல ஞானப் படலம்
முற்றிற்று.

---

## கசு. சமவசரணப் படலம்.

475. அருகா சரணம்! அமலா சரணம்!
முருகார் திருவே! முதல்வா சரணம்!
பெருமா தவனே! பெரியோய் சரணம்!
உருகும் மருளே! ஒளியே சரணம்! (க)

476. அன்பே மனதாய், அருளே விழியாய்,
இன்பே அழகாய், இனிவே மொழியாய்,
பண்பே பரிசாய், பரிவே யுருவாய்,
நண்பே நிலவும் நடுநா யகனே! (உ)

477. விமலா சரணம்! விஜயா சரணம்!
கமலா சனனே! கதிரோய் சரணம்!
அமலா அருகா! அறனே வரனே!
நிமலா சரணம்! நித்தா சரணம்! (ங)

478. அமைதிக் கடலே! அறிவே, நிறைவே!
அமணர்க் கொளியே அருகா! அருகா!
அமரர்க் கரியோய்! அருகந் தாணம்!
சமவச் சரணத் தரசே. சரணம்! (ச)

479. முத்தர்க் கருள்நான் முகனே சரணம்!
அத்தா அடியார்க் கமுதே சரணம்!
சித்தா சரணம்! திருமால் சரணம்!
சுத்தா சரணம்! சுகனே சரணம்! (ரு)

வேறு.

480. சுடரொளி வைரத் தவிசில் மாமரைமேல்,
துலங்குபூம் பிண்டியின் னிழலில்,

கடவுளர் பலருங் கவரியே வீச;
கவின்பெரு பூமழை சொரிய,
இடையறாத் தேவ துந்துபி முழங்க,
இமயவர் முக்குடை கவிக்க,
கடையறு வின்பக் காட்சியான் பொலிந்த,
காட்சியை யெவர்கொலோ கழல்வார்! (கூ)

481. பொன்னரி யணையிற் பொலியொளி பரவ,
பூமலி யசோகுவீற் றிருக்கும்,
மன்னனை வணங்கி மாதவர், துறக்க
மாதர்கள்*, ஆரியாங் கனைகள்
† பின்னுமுத், தேவ மாதர்கள், பவணர்
வியந்தரர், சோதிடர், வானோர்,
மன்னவர், மாக்கள் மகிழ்வுறப் பொலிந்த
மாண்பினை என் சொல்லுகேன் வறியேன்! (எ)

482. நாற்கதி யுயிர்கள் நன்னெறி யறிய,
நாவிலாத் திவ்விய வாணி
மாகதி மொழியில் வந்ததே ஞான
நாதனின் ஆவியி லிருந்தே,
ஆகிய தகிம்ஸை அறமெனும் வாக்கே,
அதன்விரி வாகிய மறையே,
ஏகனே சமவ சரணத்தில் மொழிந்த
தென்சொல்கேன் எளியனேன் யானே! (அ)

வேறு.

483. இனிமையுந் தெளிவுமாகும்,
எங்கணும் பரவி யோங்கும்;

---

* கல்பவாஸி தேவஸ்திரீகள்.

† சோதிடர், வியந்திரர், பவணருடைய ஸ்திரீகள்.

தனிப்பெரு மொழியே யாகும் ;
　　தத்தம தையந் தீர்க்கும் ;
அனைத்துயிர் மனத்தும் வேண்டும்
　　அரும்பொருள் சுரக்கும் ; கேட்டோர்
வினைகளைத் தீர்க்கும் ஆங்கே
　　விமலனின் அமுத வாக்கே ! (கூ)

**வேறு.**

484. இத்தகைச் சமவ சரணத்திற் கூட,
　　இன்பமும் அன்புடன் சேர்ந்தார்
எத்தனை தேவர், மன்னவர், முனிவர்,
　　இவர்க்குளே சிரேணிக னனென்
உத்தம மகத நாடனே யுள்ளான் ;
　　உயர்பெருங் கலைக்கட லான
வித்தகன் இந்த்ர பூதிகௌ தமனே,
　　வீற்றனன் கணதரனாக ! (ய)

485. ஈடிலாக் கலையோன் இந்திரபூதி
　　இறைவனின் முதல்முதற் சீடன்,
பீடுயர் சினைப் பெருமுப தேசம்
　　சிறந்திட வுலகெலாம் புகன்றான்.
நாடியே சுதர்ம னென்றொரு சீடன்,
　　நாயகன் கணத்தினிற் சேர்ந்தான் ;
கூடினர் இன்னும் குணமலை யருளைக்
　　கூடவே கணக்கிலாப் புனிதர். (கக)

486. இந்திர னக்னி வாயுபூ திகளும்,
　　இலகிடும் மௌர்யன் சுதர்மா,

ஐந்துநூற் றறவோர் தனித்தனித் தலைமை,
அதிலரை ‡ மண்டிதன்; மயூரன்,
முந்தகம் பிதனும், அசலனும், மைத்ரன்,
ப்ரபாசனும், மூன்றுநூ றணிந்தே,
எந்தையின் சபையில் கணதரராக,
இலகினர் பதினொரு புலவர்! (கஉ)

487. ஆவரே பூர்வர் மூன்றுநூ றவதி
யறிவினர் இன்னுமா யிரவர்;
ஆவரே ஏழு நூறுகே வலிகள்;
விக்ரிகர் ஆவரொன்பது மைந்
தாவரே நான்மை யறிவினர்; சீடர்
ஆவரே யொன்ப தொன் பதின்மர்;
ஆவரேவாதர் நான்கெலாம் நூறும்,
அருகனின் திருச்சபை பொலிவார்! (கங)

488. முப்பதா யிரவர் ஆரியாங் கனைகள்,
சந்தனை முதல்வியா மவர்க்கே;
முப்பது லட்சம் சிராவகியோரே
ஒருலட்சம் முறைநெறி மனையோர்;
தப்பிடா தறத்தைப் போற்றியே பணிகள்
சாலவுஞ் செய்தனர்; அருகன்,
இப்பெருஞ் சீடக் கூட்டத்தோ டெழுந்தே
இவ்வுல குயும்பணி புரிந்தான்! (கச)

489. மகதம், விகாரி, காசி, குசாம்பி,
சம்பக புரியினில் மாண்பாய்,

---

‡ மண்டித புத்தன், மயூரபுத்தன்.

தகுமுறை மன்னர் உபசரித் தேற்றே,
தழுவினர் அருகனின் நெறியே!
மிகப்பல மாந்தர் திசைதிசை வந்து
மேவினர் தூயவ ரானார்;
உகப்புற ராஜக் ரகந்தனிற் பலகால்
உறைந்தனன் சேணிக னுடனே! (கரு)

வேறு.

490. கண்டனர் குருடர்; கேட்டார்
செவிடர்கள்; கால் நடந்தார்
நொண்டிகள்; மொழிந்தார் ஊமர்;
நோவுற்றோர் பிணிய கன்றார்;
திண்டிறல் பெற்றார் சோர்ந்தோர்;
திசையெலா மொளிர வீரன்
அண்டிடும் பொழுதே சுத்த
வானந்தம் பரவிற் றம்மா! (கசு)

வேறு

491. உயர்பெருஞ் சீடர் எத்தனை கோடி!
உலகெலாம் நகர்வதே போல,
அயர்விலா தெங்கும் அமணெறி யோதி
யவனியைப் புனிதமாக் கினரே!
துயரினிற் றுடிக்கும் உயிர்கள் விடைையச்
சுதந்திர முதவியே ஐயன்
நய, மெது, இனிய, நன்மொழி யறங்கள்,
நவின்றதைச் சுருக்கமாய் நவில்வாம். (கஎ)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினானந்தம் சமவசரணப் படலம்
முற்றிற்று.

## கஎ. ஜீவோபதேசம்.

492. அன்பு பேணுமின்! அன்பு பேணுமின்!
அன்பே செய்மின்! ஆருயிர்க் கெல்லாம்! (க)

493. இன்னா விடுமின்! இனியவை நடுமின்!
இன்னா மறுத்தல்! மன்னுயிர்க் கறமே! (உ)

494. வாய்மன முடலிற் றூய்மை யாகுமின்!
தூய்மை யாகவே தொல்வினை யுதிரும்! (ங)

495. அருளும், உறுதியும், ஆண்மையும், கொண்மின்!
இருள்கடிந் தொழுகுமின், இன்ப மெய்துமின்! (ச)

496. எல்லா வுயிர்க்கும் நல்லதே செய்மின்!
பொல்லா வினையைப் பொய்யென வுதிர்மின்! (ரு)

497. சமரஸம் பேணுமின்! சமரஸம் பேணுமின்!
அமைதிக் கிதுவே அறவழி யறிவீர்! (சா)

498. ஒருவினைக் கணியாய் உலகி லுதித்தீர்
பெருவினை மறந்தே பேதமை பூண்டீர்! (எ)

499. மனமொழி யுடலில் மாசுற் றழிந்தீர்!
வினைசுற் றியதோர் வியனொளி யான்மா, (அ)

500. உண்மை யுருமறைந் துழன்றது காண்மின்!
தன்னய முற்றதும் இன்னலே புரிவீர். (சூ)

501. வினைசுற் றியதோர் வியனொளி சீவன்,
வினைவிட் டகன்றதும் பேரொளி விமலனும். (கO)

502. சேர்ந்த வினையே சிந்துற வந்தே,
மீண்டும் வினைசெய் மிச்சையி லாழ்ந்தே, (கக)

503. தன்வினை தீர்க்கத் தரணியில் வந்தே,
புன்மையாம் பற்றுற் புதுவினை சுற்றி, (கஉ)

504. கங்கைபோற் பொங்கும் களிப்பினை விடுத்து,
மங்குலாங் கானலை வாய்மையென் றெண்ணி, (கங)

505. மண்வகைப் பற்று மனைமகப் பற்றோ
டெண்ணத் தொலையாப் புண்படா தொழிமின்! (கச)

506. பாலிற் கலந்தநெய் போலுமான் மாவைப்
வாலறி வுப்புரை வழங்கி யறிமின்! (கரு)

507. தோலும், மசவுந் தோற்றமும், பொருளும்,
மேலும் பெருக்கி மிச்சைக் காளாய்ச் (கசா)

508. சோரும் வழியைப் பாரி லடைந்து,
பேரின் பத்தின் மருந்தைப் பிரிந்து, (கஎ)

509. தனையாற் பிணிப்புறு நூற்புழு சால,
வலையாங் கவலையில் மயங்கிட வேண்டாம்! (கஅ)

510. பத்தா றேழ்நவ பதங்க ளறிந்தே,
முத்தாய் மையுற மும்மணி வழியே! (கசு)

511. தானே தனக்குத் தகுதுணை யறிமின்!
ஊனக் கண்விட் டுள்ளொளி காண்மின்! (உ0)

512. வெளிச்சந் தோன்றும், வெளிச்சம் தோன்றிற்
களிப்பே யாகும்; கங்குலும் மறையும்! (உக)

513. இன்பக் கோயிலா யிலகிடும் புவியே!
உம்பணி யதிலே யுளத்தொடு மாற்றின், (உஉ)

514. விடுதலை யடைவீர் விரிபே ரின்பம்,
அடைதலைப் பெற்றால் அமரனாய் வாழ்வீர்! (உங)

515. உம்மையே சோதி யுள்ளுரை யாக்க,
சொன்மனஞ் செயலிற் சுத்த முறுவீர்! (உச)

516. இன்னா விடுமின்! இனியவை நடுமின்!
தன்னயந் தவிர்மின் சத்தியத் துய்மின்! (உரு)

517. பிறர்க் குதவுமின்! பிரதிமை காமின்!
அறவழி நடமின்! ஐவரைத் தொழுமின்! (உசா)

518. உண்மை யோங்குக ! உயருக அறமே !
தண்மை தழைக்கத் தந்தைதாய் போற்றுக ! (உஎ)
519. அண்மையர், விருந்தினர், அண்டினோர்ப் போற்றுக!
வண்மை யுறுக ; வருந்தினோர்க் கிரங்குக ! (உஅ)
520. போரவா விடுக பொறாமை போற்றுக !
கூர்மத மடக்குக ! கொலைசினந் தவிர்க ! (உகூ)
521. ஊனுங் கள்ளுந் தேனுடன் விலக்குமின் !
பேணுமின் விரதம் மான நலமாம் ! (௩0)
522. வீண்மை யகற்றுமின் ! வெற்றுரை விலக்குமின் !
ஆண்மையும் வீரமும அழகுறக் கொண்மின் ! (௩க)
523. எக்கார ணத்தும் இரவிலுண் ணன் மின் !
வெஃகார் வெகுளார், அஃகார் அருளே ! (௩உ)
524. தூய்நீர் குடிமின் தூயவூ ணுண்மின் !
நோயூண் டவிர்மின் ; நோன்புட னுண் ணுமின்! (௩௩)
525. வேட்டையுஞ் சூதும் விரகமும் விடுமின் !
வாட்டுதல் பிறறை வாட்டிடும் உமையே ! (௩ச)
526. அணுவும் பிறவுயிர்க் கணுகா தின்னல்,
பணிவும் மென்மைப் பரிவு முறுமின் ! (௩ரு)
527. பூரண மடைந்த புனிதரைத் தொழுமின் !
சீருடன் முனிவர் திருப்பணி புரிமின் ! (௩கூ)
528. வஞ்சமும் செருக்கும் நஞ்செனத் தவிர்மின் !
அஞ்சுதல் விடுமின் ! ஆற்ற லுறுமின் ! (௩எ)
529. வன்னி யறத்தை யுண்மையாய்க் கொண்மின் !
வண்மையும் தூய்மையும், வாய்ந்திடு வீரே ; (௩அ)
530. மன்னுல கத்தின் மாறுத லுணர்வீர் !
நன்மையுந் தீதும் நம்வினைப் பயனே ! (௩கூ)
531. ஆன்மா வேறே யாக்கை வேறே !
தானே யுயர்வதும் தாழ்வதுந் தன்னால் ! (ச0)

532. அரியதே யுலகிற் கருமமே யாற்றல் ;
அரியதே யுலகில் ஆன்ம மயமே ; (ருக)

533. அஹிம்ஸை பேணுமின் ! அஹிம்ஸை பேணுமின் !
அஹிம்ஸையே உயிர்கட் கறமொன் றாகும் ! (ருஉ)

534. அன்பை அடைந்தார் அனைத்து மடைந்தார் !
அன்பை யிழந்தார் அனைத்து மிழந்தார் ! (ருஙு)

535. கருமத்தை யுதிர்த்தே மாந்தர்
கடவுளான் றன்மை யெய்தும்
மருமத்தை முப்ப தாண்டு
மக்களுக் ககிம்ஸை யென்னுந்
தருமத்தை யோதி யோதித்
தாரணி யெல்லாஞ் சுற்றி,
அருகந்தன் அடைந்தான் பாவா
புரியினை யந்த மாக ! (ருச)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினானந்தம், ஜினோபதேசம்

முற்றிற்று.

---

# கஅ. பரிநிர்வாணப் படலம்.

536. திசைசிலம்பத் துதியோதிச் சீடர்கணந்
திறைகடல்போற் சூழ விந்த,
நசையுலகி லிருள் துணிக்க நல்லொளியை
நல்கியருள் புரிந்தே சுற்றும்,
வசைகளைந்து சாந்தமுற மாந்தருக்கே
வழிகாட்டி யாறு நாட்கள்,
அசைவறவே அவை யமர்ந்து
விளங்கினன் பாவாபுரியில் அருகதேவன்! (க)

வேறு.

537. அந்நக ரரசன் அத்தி பாலனு மமைத்த கூடத்
தெந்நிலை யுயிர்க ளுக்கும் ஈரிரு கதிக டக்கும்
அந்நல வழியைப் பன்னி ரங்கமோ டோதக் கேட்க
எந்நிலைத் தவஞ்செய் தார்கள் இங்கிருந் தார்க
ளம்மா! (உ)

538. மன்னவர் குடிகள் மற்றோர் மாதவ ரெல்லா
மன்னோன்
இன்னிய விருந்தே யுண்டார் ஆவியில் லின்பு பாய!
பண்ணவன் சித்த னாகும் பரிநிரு வாண கால
முன்னமே யெதுவு ரைத்தான் முயன்றதைக்
கூறுவாமே! (ங)

539. கருமமே பிறப்பி னாதி! கருமத்தால் நன்மை தீமை
வருகுமே பந்தமெல்லாம்! வாழ்வுறு முயிரினங்கள்
கருமத்தி னளவே வாழும்! கருத்தினை யூன்றி நாளும்
கருமத்தைத் துடைத்தால் நல்ல கதிபெற லாவ
தாமே! (ச)

540. மனமதே தோற்ற வாதி, மனமதே பந்த மோக்கம்,
மனமதே எண்ணமாகும், எண்ணமே வலிய பந்தம்!
மனமதே மாயா பாச மதிலென வொளி மறைக்கும்!
மனதினை யுறுதிசெய்தால் மற்றொரு வெற்றி
யேனோ! (ரு)

வேறு.

541. காமசின லோபமத மோகமொ டிடம்பமும்,
கருவம் பொறாமை தர்ப்பம்,
நாமெனு மசூயை விலங்குகள் திரிந்திடும்
நடுமனக் காட்டி லம்மா!
நேமமும் பத்தியும் முறுதியும் முண்மையும்,
நிலவுமுத் தூய்மை யென்னுஞ்
சேமமாஞ் சிலையினில் தவமெனும் அம்பேற்றி
செயவேட்டை யாட வாரீர்! (சு)

வேறு.

542. புலன்கவர் பொருளை நோக்கிற்
புகுஞ்சினம், ஆசை மோகம்;
அலமரும் புந்தி நம்பி
யல்லதை யாற்றி வீழும்!
உலகினிற் பொய்வாழ் வெய்தும்!
போகமே யுளத்தைப் பற்றும்
அலகையென் றறிவீர் ஆசை
அறுமினோ ஈசனோடும்! (எ)

543. இல்லற முற்றோர், நெஞ்சில்
துறவினை யெய்தி, வாழ்வில்
நல்லறப் பணிகள் செய்தே,
நவையற வாழு வீரே!

அல்லவை விலக்கிக் காத்தே
அணுவிர தங்க ளாதி,
மெல்லவே பற்றை நீத்தே,
விடுதலைக் குயரு வீரே ! (அ)

544. பொன்னைமண் ணென்றே நீக்கிப்
புனிதமா மனத்திற் பெண்ணை
அன்னையாய் மதிப்பீர் ; ஆதி
ஆத்தும சக்தி யெல்லாம்
மன்னுயிர்க் குள்ளி ருக்கும்
மாண்பினை யறிந்தால், யாரே
தன்னலம் விடுத்து மற்றோர்
தழைத்திட வாழ்ந்தி டாரே ! (கூ)

545. காசினைக் கருதி னோர், தங்
கடன்முறை புரியா நெஞ்சப்
பாசத்திற் பிணிப்புண் டோர்கள்,
பரிவிலர், வஞ்சக் கள்ளர்,
மோசரும், மதுவுண்பாரும்,
மூதறம் பிழைத்தே வேசை
யாசையிற் படுவா ரின்னோர்
அடைந்திடா ரின்ப மம்மா ! (க0)

546. புகழொடும் பயனை எண்ணிப்
புரிந்திடுஞ் செயல்க ளெல்லாம்,
இகத்தினிற் கூலி வேலை
யாகிடும் இயம்பி னம்மா !
சகத்தினில் கருமம் விட்டே தனித்தவ
முயலுவோர்க்கே

உகப்புடன் உயர்க ளிப்பே
உறவொடுங் கூடு மன்றே ! (கக)

547. பொய், கொலை, களவு, காமம்,
பொருள்நசை சாவு மற்றே,
செய்யசால் பினராய்த் தூய
செயலின்பம் பூசை யன்பும்,
மையல்போம் அறிவுஞ் செய்கை,
மருவறு நினைப்பி னோடும்
மெய்யவர் தொண்டு செய்ய
மேநிலை வணங்கும் முன்னே ! (கஉ)

548. உட்புறக் களிம்பு போகும்
உயரிய வொழுக்கத் தாலே
நட்பொடுங் கருணை யோடும்,
நலமொடுஞ் சீல முண்மைப்
பெட்பொடு முனைவு, நோன்பும்,
பெருமைசேர் சுத்த வாழ்வில்
நட்பொடு மறிந்து நிற்க
நவலரு மின்ப மாமே ! (கங)

549. காமத்தைக் கடிவீர் ! நெஞ்சில்
கடுஞ்சினப் பகையை மாய்ப்பீர் !
ஏமமும், அன்புங் கொள்வீர் !
இரக்கமோ டுயிரைப் பேணீர் !
தோமறு முதவி செய்வீர் !
தூயநன் னெறியில் வாழ்வீர் !
தாமதம் விடுவீர் ! நெஞ்சிற்
சாந்தமே யொளிரு வீரே ! (கச)

550. தீதின்மை, தூய்மை, வாய்மை,
சிறந்தநல் லொழுக்க மேன்மை,
ஈதலே மறவா நன்றி,
இதயத்தி லின்ப மாதல்,
கோதறுங் குணமோ டிந்தக்
குவலயத் தொண்டு செய்தல்,
ஈதலாற் சுருதி வேறே
யில்லையிவ் வொழுக்கத் துய்வீர்! (கரு)

551. சுத்தமே கடவுட் டன்மை;
சுத்தமே சோதி வாழ்வு;
சுத்தமே இன்ப மாகும்;
சுத்தமே பிணிகள் போக்கும்;
சுத்தமே அறிவிற் காணும்
தூயநற் சுடர் விளக்கும்;
சுத்தமே யாகி யெல்லாம்
தொத்தற வினிது வாழி! (கசா)

552. இத்தகை யமுத மாரி
இனு மினுமெனப் பொழிந்தான்!
சித்தனுங் காலம் இந்தோ
செறிந்ததென் றோர்ந்தா னம்மா.
உத்தமச் சுக்ல ஞான
மொளிர்ந்திடு புலவ னங்கே,
சுத்தநிர் வாணப் பான்மை
துலக்கியே யிறுதி நின்றான். (கஎ)

553. ஆங்குடன் நாம கோத்ரம்
ஆயுஷ்யம் வேத நீயம்

நான்குறும் அகாதி கர்மம்
நலிந்திட முத்தி பெற்றே
ஓங்கினன் விண்ணை நோக்கி
ஒளிபெற வுலக மெல்லாம்
நீங்கினன் பந்த மெல்லாம்
நிலவினன் சித்தனாக! (கஅ)

554. கார்த்திகை யம்மா வாசை
சுவாதியே கண்ட தல்லால்,
பேர்த்தொரு வருமே காணார்;
பெருஞ்சபை துயின்ற தம்மா!
தீர்த்தனங் கில்லை; சித்த
சிலையினில் ஒளியே யாகிச்
சேர்ந்தனன் சுத்த நிர்வா
ணத்தினிற் சிறப்பாய் மன்னே! (கசு)

555. எண்குணம் நிறைந்து பாரின்,
இழுக்கொன்று மிலதே யாகி,
விண்மணிச் சுடர்பி றங்கி,
விண்ணவர் பரிநிர் வாண
நன்மணங் கொளிக்க, நாதன்
நலியுடற் பந்த மின்றி,
மன்னுயிர்க் கின்னு மெங்கும்
மனத்தரு ளாக நிற்பான்! (உ0)

556. வாழிய வருக நாதன் வாழிய சித்த ராளோர்!
வாழிய ஆசார்! என்றும் வாழியு பாத்தி யாயர்!
வாழிய சாது மார்கள்! வாழிய அருக வேதம்!
வாழிய சுத்த தர்மம்! வாழிய சுத்தன் மாதோ! (உக)

557. விழித்தனர் நான்காஞ் சாமம் !
வினேந்ததை யறிகி லாதார்,
விழிதனே நம்பார், ஐயன்
வெண்ணிறச் சோதி யான
வழியினேக் காணுர், எல்லாம்
வாய்வெறீஇ கூச்ச லிட்டார் !
பழித்தனர் உறக்கந் தன்னே !
பாய்ச்சினர் மலர்க்கண் ணீரே ! (உஉ)

558. அருகவோ அருக ! எங்கள்
ஆண்டவா ! அன்பு நாதா !
அரசவோ ! ஆச னேவோ !
ஆருயிர்த் துணேயே ! அந்தோ !
நரகதி யுழலு வோரைத்
தேவராக் கினவா ! நாங்கள்
உருகிட விட்டு நீயெங்
கொளிந்தனே என்பா ரம்மா ! (உங)

559. "பொருந்துமின் களிப்பே யின்றே
பூரண நிருவா ணத்தைப்
பொருந்தினுன் சித்தனு கிப்
பொலிகுனன் சுடராய் ! ஒன்றும்
வருந்தன்மின் ! ஐயன் வேத
வாக்கினே யொழுகித் தேர்மின் !
திருந்திய விந்த நாளேத்
திருவிழா வாக்கீ ரென்றும் !" (உச)

560. இம்மொழி வானிற் கேட்டே
எழுந்தனர் ; சுத்த மான

தன்மையோ டோதி வேதந்
தந்தனர் தான மெல்லாம்;
இன்புற்ருன் சித்த ஞக,
எனுங்களி துளக்க வெங்கும்,
அன்பினி லொன்றி அன்ஞேர்
அருகனை வாழ்த்தினரே! (உரு)

561. வியந்தனர், அலறினார்கள்
விமலனை யெண்ணி யெண்ணி,
அயர்ந்ததை நோகு மெல்லே,
அவிர்ந்தது விமான மஃதில்
உயர்ந்தவிந் திரனுந் தேவர்
ஒளிர்ந்தனர் கீதத் தோடும்!
பயந்தனை யொழிமின்! நாதன்
பகவனுய் வாழ்வா னென்ருர்! (உசு)

562. செங்கதிர் அனல் குளித்தாற்
போலவே, தேவர் அந்தத்
துங்கனின் உடலேச் சந்தம்
அகிலொடு மெரியிட் டேத்தி,
அங்கையால் அலர் சொரிந்தார்,
அருட் பிழம் பண்ணல் மேனி
பொங்கொளி யுடன் மறைந்த
புதுமையைக் கண்டா ரம்மா! (உஎ)

563. திருவிழா முழக்கி ஞர்கள்
தேவர்கள் ஒன்று கூடிப்
பரிநிரு வாண கல்யா
ணத்தினேப் பாடி யாடி,

உருகினர்; எஞ்சு நீற்றை
யுடலணிந் தன்பி னேடும்
அரதனச் செப்பி லேந்திப்
பாற்கடல் அணியப் பெய்தார். (௫-அ)

564. சித்த வாழ்க! தேவ வாழ்க!
சீல வாழ்க! சீனனே!
அத்த வாழ்க! அரச வாழ்க!
அருக வாழ்க! ஆதியே!
நித்தவாழ்க! நேமி நாத,
நிமல வாழ்க! அமலனே!
சுத்த வாழ்க! சாமி வாழ்க!
சோதி வீர வாழ்கவே! (௫௯)

565. முத்தூய் மைத் திறத்தாலே
மும்மணி யின் நெறியான
சுத்த சுதந்திரச் சமமாஞ்
சுகநி லேயே தானகுஞ்
சித்தன் வழியுல குய்யச்
ஜினனந்தத் தேன் மடுத்தே
சுத்தா னந்தன் விரதத்
துற வுடனே துலங்கினனல்! (௬0)

சுவாமி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய
ஜினனந்தம் பரி நிர்வாணப் படலம்
மு ற் றி ற் று.

# செய்யுளகராதி.

## இப்புத்தகம் கிடைக்குமிடங்கள்.

(1) ஸ்ரீ தரும சாகர சுவாமிகள் சாஸ்திரசாலை,
திருப்பறம்பூர், செய்யாறு தாலூக்கா,
அசனம்மாபேட்டை போஸ்டு.
(N. A. Dt.)

(2) "ஜைன கெஸட்" ஆபீஸ்,
9, அம்மன் கோயில் தெரு,
ஜி. டி., சென்னை.

(3) ம-ா-ா-ஸ்ரீ தி. ஆதி நயினார்,
21, பாரிஷ் வெங்கடாசல அய்யர் தெரு,
ஜி. டி., சென்னை.

(4) தென்னிந்தியா ஜீவரக்ஷா பிரசாரக சபை,
436, தங்கசாலை வீதி,
ஜி. டி., சென்னை.